ஞாழலென்பதுவேயாண்மரமுடனுங்
குங்குமமெனவுங்கூறுமிருபெயர் ரு
ஞானந்தானேயறிவுங்கல்வியும் சா
ஞாளியேமதுநாயெனவிருபெயர் எ

ஞாமுதலிருபேர்முற்றும்.

ஞாமுதன்முப்பெயர்

ஞாட்பென்பதுவேபூசலுங்கூட்டமும்
பாரமுமென்றேபகருமுப்பெயரே அ

ஞாமுதன்முப்பேர்முற்றும்.

ஞாமுதலைம்பெயர்

ஞாங்கர்தானேமேலுமிடமும்
வேலும்பக்கமுமுன்புமென்றைந்தே சு

ஞாமுதலைம்பேர்முற்றும்.

ஞாமுதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்-கக.

ஞிம்முதலொருபெயர்

ஞிமிறென்பதுவேவண்டெனலாகும் க

ஞிம்முதலொருபேர்முற்றும்.

ஆகச்சூத்திரம்-கஉ.

ஞெம்முதற்பலபெயர்ச்சூத்திரம்.

ஞெம்முதலொருபெயர்

ஞெரேலென்பதுவேதண்மையாகும் க
ஞெளிதல்தானேகுடைதலாகும் உ
ஞெலிகோலென்பதுதீக்கடைகோலே ங
ஞெகிழமென்பதுபொற்சிலம்பெனுமே ச
ஞெளிரென்பதுவேயோசையாகும் ரு
ஞெண்டுதானேநண்டெனலாகும் சா

ஞெம்முதலொருபேர்முற்றும்.

ஞெம்முதலிருபெயர்

ஞெரலேயொலியும்விரைவுமிருபெயர் எ

ஞெமிர்தலென்பதுமுற்றலுடனு
முறிதலெனவுமொழியுமிருபெயர் அ

ஞெம்முதலிருபேர்முற்றும்.

ஞெம்முதன்முப்பெயர்

ஞெகிழிதானேசிலம்புந்தீயுங்
கொள்ளிவிறகுமெனுமுப்பெயரே கூ

ஞெம்முதன்முப்பேர்முற்றும்.

ஞெம்முதலெண்பெயர்

ஞெள்ளலென்பதுபள்ளமுமேன்மையும்
வீதியுஞ்சோர்வுமிகுதியும்பூசலு
முடன்படலுடனுமொலியுமெண்பெயரே க0

ஞெம்முதலெண்பேர்முற்றும்.

ஞெம்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்-உஉ.

ஞேமுதலொருபெயர்

ஞேயமென்பதுசினேகமாகும் க

ஞேமுதலொருபேர்முற்றும்.

ஆகச்சூத்திரம்-உங.

ஞொம்முதன்முப்பெயர்

ஞொள்கலென்பதுவேயச்சக்குறிப்பு
மிளைத்தலுஞ்சோம்புமெனுமுப்பெயரே க

ஞொம்முதன்முப்பேர்முற்றும்.

ஆகச்சூத்திரம்-உச.

இதந்தருபுலியூர்ச்சிதம்பரரேவண
னிதந்தரப்புகலகராதிநிகண்டினிற்
பகருஞகராதிப்பேர்நாலாந்
தொகுதியிற்சூத்திரமிருபத்தாறே

நான்காவது:

ஞகராதிப்பெயர்த்தொகுதிமுற்றும்.

ஐந்தாவது:

# தகராதிப்பெயர்த்தொகுதி.



தன்மசன்மனைச்சார்குணக்குருவினை
யிம்மையர்ச்சித்துப்பட்டீசரையிறைஞ்சித்
தகராதிப்பெயர்த்தொகுதியைத்தருவாம்.

## தம்முதற்பலபெயர்ச்சூத்திரம்.

### தம்முதலொருபெயர்

தமகமென்பதுமருக்கொழுந்தின்பெயர் க
தருவர்தாமேயரக்கராகும் உ
தகைத்தலென்பதுசெறிதலாகும் ௩
தக்கைதானேபலவகைப்பறையாம் ௪
தட்பமென்பதுகுளிர்ச்சியாகும் ௫
தடாவென்பதுவேமிடாவெனலாகும் ௬
தந்தியேகுஞ்சரமெனப்படுமே ௭
தணத்தலென்பதுபிரிதலாகும் ௮
தணியருனேகள்ளெனப்படுமே ௯
தண்டாமைதானேநீங்காமையாகும் க0
தண்டலைதானேசோலையாகும் கக
*தத்தருனேசெல்கதியாகும் கஉ
ததியென்பதுவேதயிரென்லாகும் க௩
ததைதருனேமிடைதலாகும் க௪
தந்தென்பதுவேநூலெனப்படுமே க௫
தபதியரென்பதுதச்சராகும் க௬
தமமென்பதுவேயிருளெனப்படுமே க௭

---

* தலையென்பது சில்கதியாகும் என்பது பி - ம்.

தட்டிதானேகோட்டமாகும் க அ
தமநியமென்பதுபொன்னெனலாகும் க கூ
†தமாலமேபச்சிலேயெனப்படுமே உ0
தமனிதானேவன்னிமரமாம் உ க
தமிசேவேங்கைமரமெனலாகும் உ உ
தம்மனையென்பதுதாயெனப்படுமே உ ங
தம்மிலந்தானேமயிர்முடியாகும் உ ச
தரங்கமென்பதுநீர்த்திரையாகும் உ ரு
தயித்தியர்தானேயசுரராகும் உ சு
தராபதியென்பதுமன்னவனாகும் உ எ
தரிஞ்சந்தானேயன்றிலாகும் உ அ
தருமனென்பதுநமனெனப்படுமே உ கூ
தரையென்பதுவேபூமியாகும் ங 0
தல்லிதானேதாயெனலாகும் ங க
தமலியென்பதுசட்டுவமாகும் ங உ
தளவந்தானேமுல்லையாகும் ங ங
தனயனென்பதுமகனெனப்படுமே ங ச
தருகைதானேயளியெனலாகும் ங ரு
தறிகையென்பதுவேயொருகருவிப்பெயர் ங சு
தற்பாடிதானேவானம்பாடியாம் ங எ
தர்ப்பணமென்பதுகண்ணாடிப்பெயர் ங அ
*தற்கெலந்தான்வறுமையாகும் ங கூ
தவரென்பதுவேவில்லெனலாகும் ச 0

தம்முதலொருபேர்முற்றும்.

தம்முதலிருபெயர்

தணியேதண்மைமலையெனவிருபெயர் ச க
தருதியேயாசாரமும்பொறையும் ச உ
தருமையென்பதுமிகுதியுமெய்ம்மையும் ச ங

---

† தமாலமென்பது பச்சையெனப்படும் என்பது பி - ம்.
* தற்செலந்தானேவலுமையாகும் என்பது பி - ம்.

தடாரிதானேபலவகைப்பறையு
மத்தளமெனவுமருவுமிருபெயர் ௪௪
தமரமேயரக்கோசையிருபெயர் ௪௫
தமியனேயிரணியனும்பிரமனும் ௪௬
தரளந்தானேமுத்துந்திரட்சியும் ௪௭
தவாவினையென்பதுமலையுமுத்தியும் ௪௮
தளிமந்தானேமெத்தையுமழகும் ௪௯

தண்ணமென்பதுவேயோர்கட்பறையு
மழுவுமெனவேவைக்குமிருபெயர் ௫௦

தத்தையேகிளிமூத்தாளிருபெயர் ௫௧

தலையலேமழைபெய்துவிடுதலும்
புதுப்புனல்வரவும்போற்றுமிருபெயர் ௫௨

தழலேகிளிகடிகோலுந்தீயும் ௫௩
தபுதலென்பதுகேடுஞ்சாவும் ௫௪
தன்னமேமான்கன்றுமற்பமும் ௫௫
தவலேமிகுதியுங்குன்றலுமிருபெயர் ௫௬
தனியேதமியொப்பின்மையிருபெயர் ௫௭
தபனனேதீயிரவியிருபெயர் ௫௮
தகடேயைம்மையுமிலையுமிருபெயர் ௫௯
தலமேயிலையுநிலமுமிருபெயர் ௬௦
தம்பமென்பதுகவசமுங்கம்பமும் ௬௧
தன்மையென்பதுதமையுடைப்பொருளு
மியல்புமெனவேயிசைக்குமிருபெயர் ௬௨
தளியேதூறலுங்கோவிலுமிருபெயர் ௬௩
தழையென்பதுவேபீலிக்குடையுந்
தழையுமெனவேசாற்றுமிருபெயர் ௬௪

தம்முதலிருபேர்முற்றும்.

## தம்முதன் முப்பெயர்

தவிசே யாணமேற் றவிசு மெத்தையுந்
தடுக்கு மெனவே சாற்று முப்பெயரே ௬௫

தரணி யென்பது மலையும் பூமியு
மிரவியு மெனவே யிசைக்கு முப்பெயரே ௬௬

தமிழென் பதுவே யினிமையு நீர்மையுந்
தமிழு மெனவே சாற்று முப்பெயரே ௬௭

தனஞ்சய னென்பது காற்றுந் தீயு
மருச்சுன னெனவு மாகு முப்பெயரே ௬௮

தருமரா சனேய ருகனுந் தருமனும்
புத்தனு மெனவே புகலு முப்பெயரே ௬௯

தசும்பென் பதுவே குடமு மிடாவும்
பொன்னு மெனவே போற்று முப்பெயரே ௭0

தடையென் பதுவே கவசமுந் தடுத்தலு
மணையா ளெனவு மருவு முப்பெயரே ௭௧

தடறென் பதுவே தொண்டகப் பறையும்
பத்தனும் படையுறை யுடலு முப்பெயரே ௭௨

தம்முதன் முப்பேர் முற்றும்.

## தம்முதனாற்பெயர்

தகரந் தானே யீயமுந் தகரமு
நறுநாற் றமுமயிர்ச் சாந்து நாற்பெயரே ௭௩

தகரே யாடு மேடமுந் தகரும்
பூமியு மெனவே போற்று நாற்பெயரே ௭௪

தஞ்சந் தானே யெளிமையும் பெருமையும்
பற்றுக் கோடுந் துணையு நாற்பெயரே ௭௫

தடவே மலையுங் குளமும் பெருமையு
மிந்தள மெனவு மிசைக்கு நாற்பெயரே ௭௬

தளையே விலங்குஞ் சிலம்பும் பிணைத்தலு
மாண்மயி ரெனவு மாகு நாற்பெயரே ௭௭

தனுவேவில்லுமுடலுமோசையு
நட்பமுமெனவேநுவலுநாற்பெயரே எஅ

தம்முதனாற்பேர்முற்றும்.

தம்முதலைம்பெயர்

தட்டேபரிசையுங்குற்றமுமுட்டுந்
தட்டுந்தேர்நடுவுஞ்சாற்றுமைம்பெயரே எகூ

தண்ணடைதானேயுடக்கையுநாடு
மருதநிலத்தூருடனேகாடும்
பச்சிலையெனவும்பகருமைம்பெயரே அ0

தளமேதாழியுஞ்சாந்துமுப்பரிகையும்
பொருபடையுடன்பூவிதழுமைம்பேரே அக

தனமேயாவின்கன்றும்வருத்தமு
முலையும்பொன்னுமுத்திரமுமைம்பெயரே அஉ

தகையேயழகுமன்பும்பண்பும்
பெருமையுமிணைப்பும்பேசிடுமைம்பெயர் அந

தட்டையேதினைத்தாளுமுண்டமுங்
கிளிகடிகோலுந்தீயுங்கழையுமாம் அச

தலையேயாதியுமிடமுஞ்சிரமு
மேலுந்தலைமையும்விரிக்குமைம்பேரே அரு

தம்முதலைம்பேர்முற்றும்.

தம்முதலறுபெயர்

தடியேயுலக்கையுமுடும்புந்தசையும்
வில்லுந்தண்டுமின்னுமறுபெயர் அசு

தண்டமேதெண்டித்தலும்படையுந்
திரளும்யானைசென்றவழியு
மூன்றுகோலுங்குடைக்காலுமறுபெயர். அஎ

தம்முதலறுபேர் முற்றும்.

தம்முதலொன்பதுபெயர்.

தண்டேவீணையுந்தடியும்படையுங்
குழாயும்வரப்புமிதுனராசியுஞ்
சிவிகையுந்தண்டமுமோந்தியுமொன்பான் அஅ

தடமேமலையும்யானைத்தண்டமும்
பெருமையும்பொய்கையும்வினைவும்வளைவும்
குளக்கரையுகமும்வழியுமொன்பான்பெயர். அகூ

தம்முதலொன்பதுபேர்முற்றும்.

தம்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—அகூ.

தாமுதற்பலபெயர்ச்சூத்திரம்.

தாமுதலொருபெயர்

தாண்டவமென்பதுகூத்தெனலாகும் க
தாடிதானேகீழ்வாயாகும் உ
தாபரனென்பதுபிரமனாகும் ௩
தாபதரேசடைமுடியராகும் ௪
தாம்பிரமென்பதுசெம்பெனலாகும் ௫
தாரிதானேவழியெனப்படுமே ௬
தாலுவென்பதுநாக்கெனலாகும் ௭
தாலவட்டமேயானையின்செவியாம் அ
தாதிமமென்பதுதாதுமாதுளையாம் கூ
தானவர்தானேயசுரராகும் க0
தாடிமமென்பதுதாதுமாதுளையாம் கக
தாதகிதானேயாத்தியாகும் கஉ

தாமுதலொருபேர்முற்றும்.

தாமுதலிருபெயர்

தாமரையேபுலியம்புயமிருபெயர் க௩
தாயமென்பதுதங்குடித்தமரு
ரிமையுமெனவேயோதுமிருபெயர் க௪
தாழைதானேநாளிகேரமுங்
கேதகையெனவுங்கிளத்துமிருபெயர் க௫

தாழியேகடலுழியிருபெயர் கசு

தாளாண்மையேயுச்சாகமுமுயற்சியும் கஎ

தாசியென்பதுபரணிநாளுடனே
யடிமையுமெனவேயறையுமிருபெயர் கஅ

தாம்பேகயிறுதாமணியிருபெயர் ககூ

தாடென்பதுவேதலைமையும்வலியும் உ0

தாளியேபனையுந்தாளியுமிருபெயர் உக

தாமுதலிருபேர்முற்றும்.

தாமுதன்முப்பெயர்

தானையேபொருபடையுந்தூசு
மாயுதமெனவுமமையுமுப்பெயரே உஉ

தாழ்தலுனேயிறைஞ்சலுங்குறைதலுந்
தங்கலெனவுஞ்சாற்றுமுப்பெயரே உங

தாமுதன்முப்பேர்முற்றும்.

தாமுதனாற்பெயர்

தாலமேயுண்கலமும்பூமியு
நாவும்பனையுநாட்டுநாற்பெயரே உச

தாரேமரக்குலைவிற்குதைமுட்கோ
லெல்லையெனவேயிசைக்குநாற்பெயரே உரு

தாமுதனாற்பேர்முற்றும்.

தாமுதலைம்பெயர்

தாவேவலியும்வருத்தமும்பகையுங்
கேடுந்தாண்டுதலுடனைம்பெயரே உசு

தானமென்பதுகொடுத்தலுஞ்சுவர்க்கமு
மதஞ்சார்பிடமுநீராடலுமாம் உஎ

தாணுவேமலையுந்தூணுஞ்சங்கரனுங்
குத்தியுநிலைபேறுமைம்பெயரே உஅ

தாமுதலைம்பேர் முற்றும்.

தாமுதலறுபெயர்

தாவரமென்பது மலையும்பூமியுங்
கோயிலுந்தேகமுநிற்பனவுடனே
மரமுமெனவேவைக்குமறுபெயர் உகூ

தாரையே*நீரோட்டமுமழையும்
விழியுங்காளமுங்கூர்மையுடனு
முடிவுமெனவுமோதுமறுபெயர் ௩௦

தாமுதலறுபேர் முற்றும்.

தாமுதலெழுபெயர்

தாரமேயாழ்நரம்பினிலொன்று
மரும்பண்டமும்வெண்கலமுந்தலைவியும்
வெள்ளியுநாவும்வல்லியுமேழ்பெயர் ௩க

தாரேகிண்கிணிக்கோவையுமொழுங்கு
மாவினணியும்பூவுமாலையுங்
கொடிப்படையுடனேகொடையுமேழ்பேர் ௩உ

தாதேயடிமையுந்†துகளுமெருமையு
மணமுதலைந்தும்பொன்முதலேழு
மிரதமாதியேழினுடனே
காவிக்கல்லுங்கருதுமேழ்பெயர் ௩௩

தாமுதலேழ்பேர் முற்றும்.

தாமுதற் பத்துப்பெயர்

தாமமென்பது மணியின்கோவையும்
பூவுமாலையுமிபமுமொளியுங்
கயிறுமொழுங்குங்கொன்றையுமலையும்
பொருகளமெனவுமொருபதுபெயராம் ௩௪

தாமுதற்பத்துப்பேர்முற்றும்.
தாமுதற்பலபெயர்ச்சூத்திர முற்றும்.
ஆகச்சூத்திரம்—கஉ௩.

---

* நேரோட்டம் என்பது பி - ம்.

† துகளும் பெருமையும் என்பது பி - ம்.

## திம்முதற்பலபெயர்ச்சூத்திரம்

### திம்முதலொருபெயர்

திசைமுகனென்பது பிரமனாகும் க
திண்மையென்பது வலியெனலாகும் உ
திண்டிமந்தானேபடகமாகும் ங
திதலையென்பது சுணங்கெனலாகும் ச
திமிலர் தானேநெய்தனிலமக்கள் ரு
திரையலென்பது வெற்றிலையாகும் சு
திமிங்கிலந்தானேயானையைவிழுங்குமீன் எ
திரையனென்பதுவேதொண்டைமானும் அ
திவற்றானேயுலோகமாகும் கூ
திவளலென்பது துவளலாகும் க0
திவிளியேபசுங்காயெனப்படுமே கக
திவாவென்பதுவேபகலெனப்படுமே கஉ
திண்டிதானேயானையின்பெயராம் கங
திருமலரென்பது த்ாமரையெனலாம் கச
திரணபதியேவாழையெனப்படும் கரு
தினகரனென்பது சூரியனாகும் கசு

திம்முதலொருபேர்முற்றும்.

### திம்முதலிருபெயர்

திணியேபூமியுந்திணியுமிருபெயர் கஎ
திண்ணமேபொய்மெய்யெனவிருபெயர் கஅ
திமிரமேயிருள்நிரயமுமிருபெயர் ககூ
திலமேயெள்ளுமஞ்சாடியிருபெயர் உ0
திலகமேமஞ்சாடிமரமுந்
திலகமுமெனவேசெப்புமிருபெயர் உக

திட்டியென்பது நுதற்புனைகுறியுங்
திட்டியுமெனவேசெப்புமிருபெயர் உஉ
*திருக்குகமென்பது முற்றமும்புடவையும் உ௩
திவாகரன்றனே †யந்தனுமிரவியும் உச
தினையேசிறுமையுந்தினையுமிருபெயர் உரு
திங்களேமதிமாதமிருபெயர் உசு
திசையேசுணங்குந்திசையுமிருபெயர் உஎ
திரிதலேகேடுலாவலிருபெயர் உஅ

திம்முதலிருபேர்முற்றும்.

திம்முதன்முப்பெயர்

திட்டையென்பதுவேயுரலுமேடுந்
திண்ணையுமெனவேசெப்புமுப்பெயரே உகூ

திதியென்பதுவேநிலைபேறும்பக்கமும்
வளர்த்தலுமெனவேமருவுமுப்பெயரே ௩0

திம்முதன்முப்பேர்முற்றும்.

திம்முதனாற்பெயர்

திரையேயலையும்பூமியுங்கட்லுந்
திரையுமெனவேசெப்புநாற்பெயரே ௩க

தித்தியென்பது குரங்குமின்பமுந்
தித்திப்புடனேபையுநாற்பெயரே ௩உ

திம்முதனாற்பேர்முற்றும்.

திம்முதலறுபெயர்

திகிரியேமலையுருளையாழி
வட்டமூங்கில்தேரெனவாறே ௩௩

திணையேகுலமுநிலமுமொழுக்கமும்
புறத்திணையேழுமகத்திணையேழு
மிருதிணையெனவுமெய்துமறுபெயர் ௩ச

திம்முதலறுபேர்முற்றும்.

திம்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—கருஎ.

---

* திச்சுகமென்பது பி - ம்.

† அந்தகனுமென்பது பி - ம்.

## தீமுதற்பலபெயர்ச் சூத்திரம்.

### தீமுதலொருபெயர்

தீம்பரேகீழ்மக்களாகும் க
தீக்கரையென்பதுமுருக்கெனலாகும் உ
தீரந்தானேபுறங்கரையெனுமே ௩
தீவென்பதுவேயிடைக்குறையாகும் ௪

தீமுதலொருபேர்முற்றும்.

### தீமுதலிருபெயர்

தீர்த்தமேவிழாநீரெனவிருபெயர் ரு
தீபரேபானியருநீரும் ௬
தீர்த்தனேயருகனுமாசானும் எ
தீபமேசுடர்பலதீவிருபெயர் அ

தீமுதலிருபேர் முற்றும்.

### தீமுதன்முப்பெயர்

தீயென்பதுவேநிரயமுந்தீங்குந்
தீயுமெனவேசெப்புமுப்பெயரே ௯

தீமுதன்முப்பேர்முற்றும்.

தீமுதற் பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்-க௯௯.

## தும்முதற் பலபெயர்ச்சூத்திரம்

### தும்முதலொருபெயர்

துருமோற்பலமேகோங்கெனலாகும் க
துகிரென்பதுவேபவளமாகும் உ
துங்கந்தானே*யுயரமெனப்படும் ௩
துடியடிதானேயானைக்கன்றும் ௪
துணரென்பதுவேகொத்துப்பூவாம் ரு

* உயர்வெனப்படும் என்பதூ பி - ம்.

துகிரிகைதானேயெழுதுங்கோலாம் — சு
துதைதலென்பதுநிபிடமாகும் — எ
துந்துமியென்பதுபேரிகையாகும் — அ
துப்புரவென்பதுவேண்டற்பாடாம் — கூ
துப்பகந்தானேநெய்யெனலாகும் — க0
துரகமென்பதுகுதிரையின்பெயராம் — கக
துணிதருனேதெளிதலாகும் — கஉ
துருவைவயென்பதுவேயாடெனலாகும் — கங
துவருதல்தானேயாடுதலாகும் — கச
துவசரென்பதுவேயீழுவராகும் — கரு
துவரிதழ்தானேயானையாகும் — கசு
துவசமென்பது துகிற்கொடியாகும் — கஎ
துவலையாவது மழையெனலாகும் — கஅ
துவ்வாமையென்பதுவேண்டாமையாகும் — ககூ
துன்னரென்பதுசேர்தாரெனும் — உ0
துன்னுவென்பதுமுதுகெனலாகும் — உக
துருக்கரேயொருசாதியாகும் — உஉ

தும்முதலொருபேர்முற்றும்.

தும்முதலிருபெயர்

துட்ரேசொற்றுடர்விலங்கெனவிருபெயர் — உங
துடர்வைதானேயுழவுமஞ்ஞையும் — உச
துச்சிலேயொதுக்கிடமுஞ்சூட்டுமாம் — உரு
துணங்கறலேயிருள்விழாவிருபெயரே — உசு
துணியறைதானே தூக்கமுஞ்செதுவும் — உஎ
துணைவனேமந்திரியுந்தோழனும் — உஅ
துண்டிலேவேய்சூழலிருபெயர் — உகூ
தும்பையேபோர்வெற்றிலையிருபெயர் — ங0

தும்பியேபிபம்வண்டெனவிருபெயர் ௩௧
துரங்கமேமரக்கலமுங்குதிரையும் ௩௨
துருத்தியென்பதுவேயாற்றிடைக்குறையுந்
தோலுமெனவேசொல்லுமிருபெயர் ௩௩
துவ்வுறுனேயுண்டலுந்தின்றலும் ௩௪
துவ்வுதலேயாற்பதமுமுண்டலும் ௩௫
துழாயேதுளவம்புல்லெனவிருபெயர் ௩௬
துணையேயளவுமொப்புமிருபெயர் ௩௭
துணியேசோதிநாள் துண்டமிருபெயர் ௩௮
தும்பேதோடுஞ்சிம்புமிருபெயர் ௩௯
துளும்பலலேதலுந்திமிறலுமிருபெயர் ௪0

தும்முதலிருபேர்முற்றும்.

தும்முதன்முப்பெயர்

துள்ளலேகலிப்பாவிஞேசையுங்
கூத்துந்துள்ளலுங்கூறுமுப்பெயரே ௪௧
துடிப்பென்பதுவேகாமுந்துடிப்புந்
தடமுளேயெனவுஞ்சாற்றுமுப்பெயரே ௪௨
துணங்கையேயொருநாளும்விழவும்
பேய்க்கூத்தெனவும்பேசுமுப்பெயரே ௪௩
துதியேயகிலுந்துதியுநுதியும் ௪௪
துலையென்பதுவேயேற்றமுந்தோட்டமுந்
துலையுமெனவேசொல்லுமுப்பெயரே ௪௫
துருவையேயருகுவனமுமிறைச்சியும்
பிண்ணாக்கெனவும்பேசுமுப்பெயரே ௪௬
துழாயென்பதுவேதுழாயும்பூதியுந்
தோமரமெனவுமுப்பெயர்சொல்லும் ௪௭
துளியேயடைத்தலுமழையின்றுளியும்
பெண்ணுமையுமெனமுப்பேர்பேசும் ௪௮

துன்னருனேசெறிதலுஞ்சேர்தலுங்
குறுகுதலெனவுங்கூறுமுப்பெயரே ௪௬

துணங்கென்பதுவேயறலும்விழவும்
நன்ருளெனவுநாட்டுமுப்பெயரே ௫0

தும்முதன்முப்பேர் முற்றும்.

தும்முதனாற்பெயர்

துஞ்சலேநிலைபேறுந்துயிலுஞ்
சாவுஞ்சோம்புஞ்சாற்றுநாற்பெயரே ௫௧

துவக்கேயுடம்புந்தோலும்பிணக்கும்
பற்றுதலெனவும்பகருநாற்பெயரே ௫௨

துனியேதுன்பமும்புலவிநீட்டமுங்
கோபமுநோயுங்கூறுநாற்பெயர் ௫௩

தும்முதனாற்பேர்முற்றும்.

தும்முதலைம்பெயர்

துண்டமென்பதுமுகமுஞ்சாரையுந்
துண்டமுமூக்குங்கண்டித்தலுமைம்பெயர் ௫௪

துரோணமென்பதுதும்பையும்வில்லுங்
காக்கையும்பதக்குஞ்சிம்புளுமைம்பெயர் ௫௫

துருக்கமேகுங்குமமுமரணுங்
கலக்கமுங்காடுங்கத்தூரியுமைம்பெயர் ௫௬

தும்முதலைம்பேர்முற்றும்.

தும்முதலறுபெயர்

துடியேயோர்காலமுமோர்பறையுஞ்
சத்தமாதராடலுங்கூதாளியு
முதடுமேலமுமோதுமறுபெயர் ௫௭

துத்தமேகண்மருந்தும்வயிறும்
பாலுநாயும்யாழிசையுடனே
யிசையுமெனவேயறுபேரிசைக்கும் ௫௮

துவரேயிகலுமாக்கமும்பவளமுஞ்
சிவப்புந்துவர்ப்புங்காட்டமுமறுபெயர் ௫௯

தும்முதலறுபேர்முற்றும்.

தும்முதலெழுபெயர்

துத்தியென்பது துணங்கையாடலு
நாளும்விழவுஞ்சுணங்குநெய்யு
மொருசெடியும்படப்பொறியுமெழுபெயர் ௬0

தும்முதலெழுபேர்முற்றும்.

தும்முதற்பதினொருபெயர்

துப்பேசுத்தமுமரக்குமுற்றமுஞ்
சோறும்வண்ணமுந்துகிரும்பகையும்
வலியுநெய்யுமாயுதத்துடனு
மனுபவங்களுமெனவாம்பதினொருபெயர் ௬௧

தும்முதற்பதினொருபேர்முற்றும்.

தும்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—௨௨௭.

தூமுதற்பலபெயர்ச்சூத்திரம்.

தூமுதலொருபெயர்

தூட்டியென்பதுபுடவையாகும் ௧

தூண்டிதானேசொல்லுதலாகும் ௨

தூமுதலொருபேர்முற்றும்.

தூமுதலிருபெயர்

தூணியென்பதுவேயம்புபெய்கூடுந்
தூணியுமெனவேசொல்லுமிருபெயர் ௩

தூணேயாற்பதந்தூணெனவிருபெயர் ௪

தூதணமென்பது தூக்கணங்குருவியும்
புறவுமெனவேபோற்றுமிருபெயர் ௫

தூவிதானேயன்னத்திறகுந்
தூவியுமெனவேசொல்லுமிருபெயர் ௬

தூவலென்பது தூவலுந் துவலேயும் ௭
தூய்மைதானேசுத்தமுமெய்ம்மையும் ௮
தூணமேபகைதூணெனவிருபெயர் ௯

தூமுதலிருபேர்முற்றும்.

தூமுதன்முப்பெயர்

தூளியென்பது குதிரையும்புழுதியு
மார்ப்புமெனவேயாகுமுப்பெயரே ௧0
தூசேபகட்டினிற்புரசையுந்தூசும்
படைவகுப்பெனவும்பகருமுப்பெயரே ௧௧

தூமுதன்முப்பேர்முற்றும்.

தூமுதனாற்பெயர்

தூம்பேவேயுமதகினுட்டுளேயு
மரக்காலுடனேபூழையுநாற்பெயர் ௧௨

தூமுதனாற்பேர்முற்றும்.

தூமுதலறுபெயர்

தூவேதூய்மையும்பற்றுக்கோடும்
பகையும்வெருப்பும்புள்ளினிற்குந்
தசையுமெனவேசாற்றுமறுபெயர் ௧௩
தூங்கலென்பது யானையுங்கூத்து
மொரோசையுமுடனேதுயிலுந்தாழ்வுஞ்
சோம்புமெனவேசொல்லுமறுபெயர் ௧௪

தூமுதலறுபேர்முற்றும்.

தூமுதலெண்பெயர்

தூரியமேநல்லாடையுமீயமு
மெழுதிடுங்கோலுமுரசும்விடமு
மெருதும்வாச்சியமுமெறிபடையுமெண்பேர் ௧௫

தூமுதலெண்பேர்முற்றும்.

தூமுதலொன்பதுபெயர்

தூக்கென்பதுவேதூக்கணங்குருவியு
நிறுத்தலுமாசாரியனுங்கனமுந்
தொங்கலுங்கவியுங்கூத்துந்துலாமு
மாராய்தலுமெனவாகுமொன்பான்பெயர் கசு

தூமுதலொன்பதுபேர்முற்றும்.

தூமுதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—உசா.

தெம்முதற்பலபெயர்ச்சூத்திரம்.

தெம்முதலொருபெயர்

தெய்வவுத்தியேசீதேவிப்பெயர் க
தெவ்வியலென்பதுபூவின்மாலையாம் உ
தெரிமாவென்பதுசிங்கமெனப்படும் ங
தெருமாறுனேசுழற்சியாகும் ச
தெருட்டலேவற்புறுத்தலாகும் ரு
தெருளானேயறிவில்லான்பெயரே சு
தெவுஎல்தானேநிறைதலாகும் எ
தெவ்வரென்பதுசத்துருக்களாகும் அ
தெய்வைதானேகுழம்பெனலாகும் கூ
தெரிசொல்லென்பதுசத்தியமாகும் க0
தெள்ளிதானேயானையாகும் கக
தெரிசியென்பதுகுதிரையாகும் கஉ
தெறுக்காறுனேதேளெனலாகும் கங
தென்புலத்தாரேபிதிர்க்களாகும் கச

தெம்முதலொருபேர்முற்றும்.

தெம்முதலிருபெயர்

தெட்டியேயிபஞ்செட்டியிருபெயர் கரு

தெவ்வே*கொளலகத்திட்டலிருபெயர் கசு

தெம்முதலிருபேர்முற்றும்.

தெம்முதன்முப்பெயர்

தெண்டிகைதானே †அளமுமாரபபாவமும்
தெல்லமுமென்றேசெப்புமுப்பெயரே கஎ

தெம்முதன்முப்பேர்முற்றும்.

தெம்முதனாற்பெயர்

தென்னென்பதுவேயிசையும்வனப்புங்
கற்புந்தெற்குங்கருதிடுநாற்பெயர் கஅ
தெவிட்டலேயொலிதரலுங்கான்றலு
மடைத்திடலுடனேநிறைதலுநாற்பெயர் கசு

தெம்முதனாற்பேர்முற்றும்.

தெம்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—உசுஉ.

தேமுதற்பலபெயர்ச்சூத்திரம்.

தேமுதலொருபெயர்

தேயுவென்பது தீயெனலாகும் க
தேம்பிதானேயானையெனலாம் உ
தேய்வைதானேசெறிகுழம்பாகும் ங
தேசென்பதுவேயொளியெனலாகும் ச
தேங்கல்தானேநிலையாகும்மே ரு
தேமல்தானேசுணங்கெனலாகும் சு

தேமுதலொருபேர்முற்றும்.

---

* கொளலகத்தீடிருபெயர். } பி—ம்.
கொளலகத்தீட்டிருபெயர்.

† உள்ளமுமாற்பாயமும் } பி—ம்.
,,,...ளமுமாற்மபாவமும்

தேமுதலிருபெயர்

தேடலேபொன்றேடலிருபெயர் எ

தேசியேநாய்தேசியிருபெயர் அ

தேனேவண்டுகள்ளொடிருபெயர் கூ

தேசிகனென்பதுதேசாந்தரியுங்
குருவுமெனவேகூறுமிருபெயர் க0

தேமுதலிருபேர்முற்றும்.

தேமுதன்முப்பெயர்

தேனுவென்பதெருமையும்பசுவுங்
குதிரையுமெனவேகூறுமுப்பெயரே கக

தேக்கென்பதுவேவெறுப்புமோர்மரமுங்
கமுகுமெனவேகருதுமுப்பெயரே கஉ

தேயமென்பதுவேயுடலும்விண்ணு
நாடுமெனவேநாட்டுமுப்பெயரே கங

தேமுதன்முப்பேர்முற்றும்.

தேமுதனாற்பெயர்

தேமேதேனுநாற்றமுந்தேசமுந்
தித்திப்பெனவுஞ்செப்புநாற்பெயரே கச

தேமுதனாற்பேர்முற்றும்.

தேமுதலைம்பெயர்

தேசிகந்தானேயழகுங்காந்தியும்
பொன்னுமோர்கூத்துந்திசைச்சொல்லுமைம்பெயர் கரு

தேமுதலைம்பேர்முற்றும்.

தேமுதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—உஎஎ.

## தைம்முதற்பலபெயர்ச்சூத்திரம்.

### தைம்முதலொருபெயர்

தைப்பையென்பது சட்டையாகும் க
தைவரலேயடிவருடலாகும் உ
தையமென்பது நூலெனப்படுமே ௩
தைத்தியர் தானேயசுரராகும் ௪

தைம்முதலொருபேர்முற்றும்

### தைம்முதலிருபெயர்

தையலேநூல்பெண்ணெனவிருபெயர் ௫
தைத்தல்துன்னமுந்தைத்தலுமிருபெயர் ௬

தைம்முதலிருபேர்முற்றும்

### தைம்முதலைம்பெயர்

தையேயலங்கலுங்குதித்தலும்புலியுங்
கள்ளுமோர்மாதமுங்காட்டுமைம்பெயரே எ

தைம்முதலைம்பேர்முற்றும்.

தைம்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—உ௮௪.

## தொம்முதற்பலபெயர்ச்சூத்திரம்.

### தொம்முதலொருபெயர்

*தொடவலென்பதுமாலையாகும் க
தொடரலென்பதுகடலெனப்படுமே உ
தொடரர் தானேமேவினர்பெயரே ௩
தொடுதோலென்பது செருப்பெனலாகும் ௪
தொடுவாயாவது புறங்கூற்றாகும் ௫
தொட்பமென்பது சாமர்த்தியமாம் ௬
தொள்ளி தானேசேறெனலாகும் எ

* தொடலென்பதுவே என்பது பி - ம்.

தொறுவரென்பதுவேயிடையராகும் அ
தொன்றுதானேபழமையாகும் கூ

தொம்முதலொருபேர்முற்றும்.

தொம்முதலிருபெயர்

தொடுப்பேயுழவுவளையிருபெயரே க0
தொடையலேவாசிகையுமாலையும் கக
தொறுவென்பதுவேயாவினிற்குழாமு
மடிமையுமெனவேயாமிருபெயரே கஉ
தொழுவேயுழலையிரேவதியிருபெயர் கந
தொட்டலேகைதீண்டலுமுண்டலும் கச
தொத்தேதொண்டுபூங்கொத்திருபெயர் கரு

தொம்முதலிருபேர்முற்றும்.

தொம்முதன்முப்பெயர்

தொடியென்பதுகங்கணமும்வளையு
மொருபலமெனவுமுரைக்குமுப்பெயரே கசா
தொட்டியென்பதுவாய்தலுந்தொட்டியுங்
கள்ளுமெனவேகருதுமுப்பெயரே கஎ

தொம்முதன்முப்பேர்முற்றும்.

தொம்முதனாற்பெயர்

தொழிலேதொல்லையுமாரவாரமுங்
களவும்பெருமையுங்காட்டுநாற்பெயரே கஅ
தொண்டையேயாதொண்டையுங்கோவையுங்
கழுத்தும்யானைத்துதிக்கையுநாற்பெயர் ககூ
தொடுத்தலென்பதுவளைத்தலும்பிணித்தலும்
பற்றலுஞ்சொற்கூட்டலுநாற்பெயரே உ0

தொம்முதனாற்பேர்முற்றும்.

தொம்முதலைம்பெயர்

தொங்கலேமயிறூக்கந்தூக்கு
மாலைபீலிக்குஞ்சமென்றைம்பெயர் உக
தொண்டேயடிமையுமொன்பதும்பழமையு
முருவுசுருக்கும்வழிபாடுமைம்பெயர் உஉ
தொடையேதொடுத்தலுந்தொங்கலுங்கணையும்
பாவுறுப்புஞ்சொற்றொடருமைம்பேரே உஙு

தொம்முதலைம்பேர்முற்றும்.

தொம்முதலெண்பெயர்

தொய்யிலேயொருவுதலுந்தொய்யலு
மழுகுங்குழையுங்கிளர்ச்சியுந்துயரமுஞ்
சேறுமுடனேயுழவுமெண்பெயரே உச

தொம்முதலெண்பேர்முற்றும்.

தொம்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—ருOஅ.

தோமுதற்பலபெயர்ச்சூத்திரம்.

தோமுதலொருபெயர்

தோடகமென்பது தாமரையாகும் க
தோக்கைதானேபுடவையாகும் உ
தோட்டிமைதானேகட்டழகாகும் ங
தோடமாவது குற்றமாகும் ச
தோணென்பது வேவில்லெனலாகும் ரு
தோயந்தானேநீரெனப்படுமே சா
தோரியென்பது சோறெனலாகும் எ
தோமமென்பது குவாலாகும்மே அ
தோரந்தானேகுற்றமாகும் கூ
தோளியென்பது சோறெனலாகும் கO
தோன்றிகர்தானேவாணிகராகும் கக

தோமுதலொருபேர்முற்றும்.

தோமுதலிருபெயர்

தோரணமேதோரணங்குரங்கிருபெயர் கஉ
தோமரந்தானேயோராயுதமும்
வாச்சியமெனவுமருவுமிருபெயர் கங
தோரியரேயாரியர்சோனகராம் கச
தோடிரியந்தான்கூத்தும்வாச்சியமும் கரு
தோல்வியேதுகிலழிவெனவிருபெயர் கசா
தோழிதானேயரக்கும்பாங்கியும் கஎ

தோமுதலிருபேர்முற்றும்.

தோமுதன்முப்பெயர்

தோட்டியேயங்குசமுங்கதவுந்
தோட்டியுமெனவேசொல்லுமுப்பெயரே கஅ
தோன்றியேசெங்காந்தளுநெல்லியு
முதரமுமென்றேயோதுமுப்பெயரே ககூ
தோளென்பதுவேபுயமுந்துணையுங்
கையுமெனவேகாட்டுமுப்பெயரே உ0
தோரையேகைவரையுநெல்விகற்பமு
மூங்கிலரிசியுமுப்பெயர்மொழியும் உக

தோமுதன்முப்பேர்முற்றும்.

தோமுதனாற்பெயர்

தோற்றலென்பதுபிறப்புந்தோன்றலும்
வலியுந்தோற்றலுமருவுநாற்பெயரே உஉ
தோன்றலேபுத்திரனுநாதனு
முல்லைத்தலைவனுமுல்லையுநாற்பெயர் உங
தோகையென்பதுமயிலுந்தொங்கலும்
வாலுஞ்சுற்றாலுநாற்பெயரே உச

தோமுதனாற்பேர் முற்றும்.

தோமுதலைம்பெயர்

தோற்றமென்பதுமிகுதியும்விளக்கமும்
வலியுங்காணலும்புகழுமைம்பெயரே உரு

தோடேயணியுமிலேயுந்தொகுதியும்
பனையிதழ்போல்பவும்பூவினிதழு
மைம்பேரென்னவறைந்தனர்புலவர் உ௬

தோமுதலைம்பேர்முற்றும்.

தோமுதலெழுபெயர்

தோணிதானேயம்புந்தெப்பமு
மதிலினுறுப்புநீருஞ்சேறு
மரக்கலமுமிரேவதியுமேழ்பெயரே உ௭

தோலேயிலவுமியானேயுந்துருத்தியுந்
தோற்பலகையுந்தோளுடனேவார்த்தையும்
வனப்புமெனவேமருவுமேழ்பெயரே உ௮

தோமுதலேழ்பேர்முற்றும்.

தோமுதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—௩௩௬.

தௌமுதற்பலபெயர்ச்சூத்திரம்.

தௌமுதலொருபெயர்

தௌவலென்பதுகேடெனலாகும் ௧

தௌமுதலொருபேர்முற்றும்.

தௌமுதலிருபெயர்

தௌவையென்பதுவேமுன்பிறந்தாளுந்
தாயுமெனவேசாற்றுமிருபெயர் உ

தௌமுதலிருபேர்முற்றும்.

தௌமுதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—௩௩௮.

வரமிகுவலஞ்சுழிவாணர்தம்புராண
முரைதருஞ்சிதம்பரரேவணனியம்பிய
வாய்த்ததகராதித்தொகுதியைந்தாவதிற்
சூத்திரமுந்நூற்றெண்ணைந்தொன்றே.

ஐந்தாவது:

தகராதிப்பெயர்த்தொகுதி முற்றும்.

ஆறுவது:

# நகராதிப்பெயர்த் தொகுதி.



மிடியகற்றிமிக்கசீர்நல்குபட்டீசரைத்
தொழுது நகராதிப்பெயர்த்தொகுதியைப்புகல்வாம்.

நம்முதற்பலபெயர்ச்சூத்திரம்.

நம்முதலொருபெயர்

நம்பனென்பதுசிவனெனப்படுமே க
நகரென்பதுவேயூரெனலாகும் உ
நரபதிதானேயரசனாகும் ௩
நாலையேகடலாமெனப்படுமே ௪
நளினமென்பது தாமரையின்பெயர் ௫
நனியென்பதுவேமிகுதியாகும் ௬
நகிலந்தானேமுலையெனலாகும் ௭
நரையென்பதுவேநறுநாற்றப்பெயர் ௮
நண்பகலானேயுச்சியாகும் ௯
நடவையென்பது வழியின்பெயராம் க0
நன்கலனேயாபரணமாகும் கக
நன்கென்பதுவேமிகுதியாகும் கஉ
நன்னை தானேயுபகாரப்பெயர் க௩
நந்தரென்பதுவேயிடையராகும் க௪

நம்முதலொருபேர்முற்றும்.

நம்முதலிருபெயர்

நதியேயாறுமாலையுமிருபெயர் க௫
நகுதலென்பதுசிரித்தலு*மொழிதலும் க௬

---

* மொளித்தலும் என்பது பி-ம்.

நடுவேமருங்குநடுவுமிருபெயர் கஎ
நந்தல்தானேயாக்கமுங்கேடுமாம் கஅ
நவமணியேபொன்னிரத்தினமிருபெயர் ககூ
நந்தியேசிவனிடபமிருபெயர் உ0
நனமேயகலுஞ்சிங்கமுமிருபெயர் உக
நவிலலென்பதுசொல்லுதல்பண்ணுதல் உஉ
நவியமேகோடாலியுமழுவும் உங
நக்கலேநகை*யுண்டலிருபெயர் உச
நன்னிலையேதவஞ்சுக்கிலமிருபெயர் உரு
நட்டமேநடங்கேடெனவிருபெயர் உகூ
நளினியேபண்வாவியிருபெயர் உஎ
நள்ளியேயோர்வள்ளலுநண்டும் உஅ
நணந்தலையேநடுவுச்சியிருபெயர் உகூ

நம்முதலிருபெயர்முற்றும்.

நம்முதன்முப்பெயர்

நகமேமலையுகிரோர்மரமுப்பெயர் ங0
நக்கனென்பதுவேயருகனுஞ்சிவனு
நிருவாணியுமெனநிகழ்த்துமுப்பெயரே ஙக
நடலையென்பது†துக்கமும்பொய்யும்
வஞ்சனையுடனும்வைக்குமுப்பெயரே ஙஉ
நயமென்பதுவேயின்பமுநியாயமு
நன்றியுமெனவேநாட்டுமுப்பெயரே ஙங
நனையென்பதுவேமதமுங்கள்ளும்
பூமொட்டெனவும்புகலுமுப்பெயரே ஙச
நவிரென்பதுவேபண்ணும்வாளு
மாண்மயிரெனவுமாமுப்பெயரே ஙரு

* தீண்டல் என்பது பி-ம்.

† நடக்கமும் என்பது பி-ம்.

?நறவமென்பது* தழியுமோர்சொல்லுங்
குங்குமமெனவுங்கூறுமுப்பெயரே ௩௬

நரையென்பதுவேயேறுங்கவரியும்
வெள்ளையுமெனவேவிரிக்குமுப்பெயரே ௩௭

நளியென்பதுவேசீதமும்பெருமையுஞ்
செறிவுமென்றேசெப்புமுப்பெயரே ௩௮

நம்முதன்முப்பேர்முற்றும்.

நம்முதனாற்பெயர்

நளிரேகுளிரும்வெறுப்புஞ்செறிவும்
பெருமையுமெனவேபேசுநாற்பெயரே ௩௯

நனவேயகலமுங்களனுஞ்செப்பலுந்
தெளிவுமெனவேசெப்புநாற்பெயரே ௪0

நரந்தமேநறுநாற்றமுங்காக்கையு
நாரத்தையுங்கத்தூரியுநாற்பெயர் ௪௧

நம்முதனாற்பேர்முற்றும்.

நம்முதலைம்பெயர்

நவிரமேயுச்சியும்புன்மையுமஞ்ஞையும்
வெற்புமருதயாழ்த்திறமுமைம்பெயரே ௪௨

நடையேவழியுமொழுக்கமுஞ்செல்வமுங்
கூத்துநடையுங்கூறுமைம்பெயரே ௪௩

நம்முதலைம்பேர்முற்றும்.

நம்முதலறுபெயர்

நகையேமகிழ்வுமொளியுஞ்சிரிப்பு
மிகழ்ச்சியுமலர்ச்சியும்பல்லுமென்றுறே ௪௪

நத்தமேயூமையுமிருளுமாக்கமுஞ்
சங்குமிரவுமூருமறுபெயர் ௪௫

நம்முதலறுபேர்முற்றும்.

---

* தனியுமொருசொலும்
தளியுமொருசொலும் } பி-ம்.

நம்முதலொன்பான்பெயர்

நவமேகூத்தும்புதுமையும்பூமியும்
பாம்புங்கேண்மையுமொன்பதுந்தொண்டும்
பழமையுங்கார்காலமுமொன்பான்பெயர் சசு

நம்முதலொன்பான்பேர்முற்றும்.

நம்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—சசு.

நாமுதற்பலபெயர்ச்சூத்திரம்.

நாமுதலொருபெயர்

நாகரிகந்தான்கண்ணோட்டப்பெயர் க
நாட்பென்பதுவேவலியெனலாகும் உ
நாரந்தானேநாரத்தைப்பெயர் ங
நாடலென்பதுதேடலாகும் ச
நாட்டியந்தானேகூத்தெனலாகும் ரு
நானகமென்பதுகுதிரையாகும் சு
நாயிலாவதுமதிலுறுப்பெனுமே எ
நாணமாவேநாவியாகும் அ
நாராயணியேதுர்க்கையாகும் கூ
நாலியென்பதுமுத்தெனலாகும் க0
நாவலந்தானேபொன்னெனலாகும் கக
நாளியென்பதுநாயெனப்படுமே கஉ
நாளிகமென்பதுவள்ளையெனப்படும் கங
நாரியென்பதுபெண்பேரெனுமே கச
நாளிகேரமேதென்னைமரமாம் கரு
நாணர்தானேயொடுக்கமாகும் கசு
நாவலரென்பதுகற்றவர்பெயரே கஎ
நாபியென்பதுகொப்பூழாகும் கஅ

நாந்தகந்தானேவாளெனப்படுமே கக
நால்வாயானையாமெனநவிலுவர் உ0

நாமுதலொருபேர்முற்றும்.

## நாமுதலிருபெயர்

நாதனேசிவன்மூத்தோனிருபெயர் உக
நாஞ்சிறுனேமதிலினுறுப்புங்
கலப்பையுமெனவேகாட்டுமிருபெயர் உஉ
நாமமென்பதுபெருமையும்பேரும் உங
நாயகந்தானேநடுவுநாயகமும் உச
நாவேநாக்குநடுவுமிருபெயர் உரு
நால்வாயனென்பதுகணபதியிந்திரன் உசு
நாறேநெல்லுநாறுமிருபெயர் உஎ
நாற்றமேதோன்றுதலுநாறலும் உஅ
நான்முகனேயயனருகனிருபெயர் உகூ

நாமுதலிருபேர்முற்றும்.

## நாமுதன்முப்பெயர்

நாடியேநாசிகையுநரம்பு
மாதர்மயிருமருவுமுப்பெயரே ௩0
நாரமென்பதுநீருமீரமும்
பாசியுமென்றுபகருமுப்பெயரே ௩௧
நாணேமடவார்மங்கலவணியு
மிலச்சையுங்கயிறுமெய்திடுமுப்பெயர் ௩௨
நாழியென்பதுபூரட்டாதியு
மளக்குநாழியுநாழிகையுஞ்சொலும் ௩௩
நாரேயன்புங்கயிறுநாரும் ௩௪
நாப்பணென்பதுயாழினுறுப்பு
நடுவுந்தேர்த்தட்டுடனுமுப்பெயரே ௩௫

நாவிதனேகார்த்திகைநாஞவிதன்
பூரநாளெனப்போற்றுமுப்பெயரே ௩௯

நாமுதன்முப்பேர்முற்றும்.

நாமுதனுற்பெயர்

நாரியேபன்னடையுமகளிரு
நறவும்வில்லிடுநாணியுநாற்பெயர் ௩௭
நாட்டந்தானேயாடலும்வாளுங்
கண்ணுமோர்பண்ணுங்காட்டுநாற்பெயரே ௩௮

நாமுதனுற்பேர்முற்றும்.

நாமுதலைம்பெயர்

நானமென்பது மணமுங்கவரியும்
பூசியபூச்சுங்குளித்திடுநீரு
நானமுமெனவேநாட்டுமைம்பெயரே ௩௯
நாளேயுடுவுநாளுங்காலையுஞ்
செவ்வியும்பூவுந்தெரிக்குமைம்பெயரே ௪0

நாமுதலைம்பேர்முற்றும்.

நாமுதலெண்பெயர்

நாகென்பது வேநத்தையும்பசுவு
மெருமையுமரையுநீர்வாழ்சாதியும்
பெண்பாலுடனேயீனுவிளமையு
மிளமரமெனவுமிசைக்குமெண்பெயரே ௪௧

நாமுதலெண்பேர்முற்றும்.

நாமுதற்பதினெருபெயர்

நாகமேகாரீயமுஞாழலும்
விண்ணுடருநற்றாசுமோசையும்
வெற்புமுரகமுங்குரங்கும்புன்னையும்
விண்ணுமிபமுமெனப்பதினெருபெயர் ௪௨

நாமுதற்பதினெருபேர்முற்றும்.

நாமுதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—௮௮.

## நிம்முதற் பலபெயர்ச்சூத்திரம்.

### நிம்முதலொருபெயர்

நிகமென்பதுவேயொளியெனலாகும் க
நிகளந்தானேவிலங்கெனப்படுமே உ
நிகேதனமென்பதேயுறையுளெனப்படும் ௩
நிசாசரர்தானேயிராக்கதராகும் ச
நிசிதமாவது கூர்மையாகும் ரு
நிணத்தலென்பது *கூடலாகும் சா
நிம்பமென்பது வேம்பெனப்படுமே எ
நியதிதானேசந்தியாகும் அ
நிரலமையென்பதேயலக்கெனலாகும் கூ
நிருதர்தானேயிராக்கதராகும் க0
நிருபரென்பது மன்னவர்பெயரே கக
நிரயமென்பது நரகமெனுமே கஉ
நிலமகன்றானேசெவ்வாயெனுமே க௩
நிலையகமென்பது மனையெனப்படுமே கச
நிகும்பலையென்பது துர்க்கையாகும் கரு
நிமலன்றானேயீசனாகும் கசா
நிறைமொழிமாந்தர்வித்துவான்களாம் கஎ

நிம்முதலொருபேர்முற்றும்.

### நிம்முதலிருபெயர்

நிலவேயொளியுநிலவுமிருபெயர் கஅ
நிமிரறானேயுயர்வுஞ்சோறும் ககூ
நிரப்பேமிடிகுறைபாடெனவிருபெயர் உ0
நிலைபேறென்பது மானமுமுத்தியும் உக
நிவத்தறானேபாத்தலுமோங்கலும் உஉ

* கூட்டல் என்பது பி-ம்.

நிவறலென்பது* நுணுக்கமும்பொய்தலும் உ௩

நிதம்பமென்பது மலையின்பக்கமு
மல்குலுமெனவேயறையுமிருபெயர் உச

நிவப்பேயோக்கமுமுயர்வுமிருபெயர் உரு

நிறமேமருமமுங்காந்தியுமிருபெயர் உசு

நிம்முதலிருபேர் முற்றும்.

நிம்முதன்முப்பெயர்

நிசியென்பதுவேயிராவுமஞ்சளும்
பொன்னுமெனவேபுகலுமுப்பெயரே உஎ

நிலையென்பதுவேமுறைமையும்பொழுதுங்
குணமுமெனவேகூறுமுப்பெயரே உஅ

நிழற்றலென்பது நுணுக்கமுநிழற்று
நிழல்செயலெனவுநிகழ்த்துமுப்பெயரே உகூ

நிம்முதன்முப்பேர்முற்றும்.

நிம்முதனாற்பெயர்

நிதியேகதையுஞ்சங்கநிதியும்
பதுமநிதியும்பொன்னுநாற்பெயரே ௩0

நிம்முதனாற்பேர்முற்றும்.

நிம்முதலைம்பெயர்

நிறையேயசையுமழியாநிலையுந்
துலாமுநீர்ச்சாலுமுணர்வுமைம்பெயர் ௩க

நிம்முதலைம்பேர்முற்றும்.

நிம்முதலறுபெயர்

நிழலென்பதுவேயருளுஞ்சாயையு
நோயுமரக்கோடுடனேசெல்வமுங்
குளிர்ச்சியுமெனவேகூறுமறுபெயர் ௩உ

நிம்முதலறுபேர்முற்றும்.

---

* நுணக்கமுநொய்தலும் என்பது பி-ம்.

நிம்முதலொன்பான்பெயர்

நியமமென்பதுவேயங்காடியுங்
குருவியும்வீதியுநியதியுநகாமுங்
கோயிலுந்தவமுஞ்சுடுகாடடனு
நிச்சயமெனவுநிகழ்த்துமொன்பான்பெயர் ௩௩

நிம்முதலொன்பான்பேர் முற்றும்.

நிம்முதற் பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—கஉக.

நீமுதற் பலபெயர்ச்சூத்திரம்.

நீமுதலொருபெயர்

நீர்த்தலென்பதுநீராதலாகும் க
நீடல்தானேதேடலாகும் உ
நீட்டித்தலென்பதுமுடித்தலாகும் ௩
நீகான்முனேமீகாமனாகும் ௪
நீலந்தனென்பதுபாணனாகும் ௫

நீமுதலொருபேர்முற்றும்.

நீமுதலிருபெயர்

நீத்தமேநீர்வெள்ளமிருபெயர் ௬
நீக்குதலேநீக்குதலுங்கொல்லலும் ௭
நீபமென்பதுகடையயனளூ
நீரிற்கடம்புநிகழ்த்துமிருபெயர் ௮
நீலென்பதுவேநீலநிறமுங்
காற்றுமெனவேகருதுமிருபெயர் ௯

நீமுதலிருபேர்முற்றும்.

நீமுதன்முப்பெயர்

நீவியென்பதுதூர்க்கையுங்கருமையு
மவுரியுமெனவேயறையுமுப்பெயரே க0

நீமுதன்முப்பேர்முற்றும்.

நீமுதனுற்பெயர்

நீழலென்பதுவேயொளியுநகையு
நிழலுமாற்பதமுநேருநாற்பெயரே கக

நீரேபூரட்டாதியுநெருப்புங்
குணமுநீருங்கூறுநாற்பெயரே கஉ

நீவியென்பதுவேயளித்தலுந்துடைத்தலுங்
கொய்சகமுடனேதூசுநாற்பெயரே கஙூ

நீவலென்பது தூசுந்துடைத்தலுங்
கொய்சகமுடனளித்தலுநாற்பெயரே கச

நீமுதனுற்பேர்முற்றும்.

நீமுதலைம்பெயர்

நீலந்தானேயிருளும்பனையு
நீலமணியுநீலநிறமு
நெய்தலுமெனவேநிகழ்த்துமைம்பேரே கரு

நீமுதலைம்பேர்முற்றும்.

நீமுதற் பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—கஙசு.

நும்முதற் பலபெயர்ச்சூத்திரம்.

நும்முதலொருபெயர்

நுங்கலென்பது விழுங்கலாகும் க
நுணக்கந்தானேகூர்மையெனப்படும் உ
நுவறலென்பதுவார்த்தையாகும் ஙூ
*நுணவுதானேகட்டிலெனப்படும் ச
நுணகமென்பதுபொன்னெனப்படுமே ரு
நுண்ணியானென்பதுமந்திரியாகும் சு
நுணிதருனேதேய்தலாகும் எ

* நுனவு என்பது பி-ம்.

நுள்ளலென்பது நுளம்பெனலாகும் அ
நுதமென்பதுவேதுறையெனலாகும் கூ

நும்முதலொருபேர்முற்றும்.

நும்முதலிருபெயர்

நுணங்கேநுண்மைதேமலிருபெயர் கo
நுனியேநுண்மையுநுனியுமிருபெயர் கக
நுதம்பேகள்ளுஞ்சோறுமிருபெயர் கஉ
நுதலேநெற்றியும்புருவமுமிருபெயர் கங
நுணவையென்பதுவேநுண்பிண்டியு
மெண்ணேலயுமெனவிசைக்குமிருபெயர் கச
நுரையேவெண்ணெயுநுரையுமிருபெயர் கரு
நுவணமென்பது தினையின்பிண்டியு
நூலுமெனவேநுவலுமிருபெயர் கசா

நும்முதலிருபேர்முற்றும்.
நும்முதற் பலபெயர்ச்சூத்திரமுற்றும்.
ஆகச்சூத்திரம்—கருஉ.

நூமுதற் பலபெயர்ச்சூத்திரம்.

நூமுதலொருபெயர்

நூங்கரென்பது தேவராகும் க
நூங்குதானேபெருமையெனப்படும் உ
நூவென்பதுவேயானையாகும் ங
நூக்கந்தானேயோக்கமாகும் ச
நூபமென்பதுவேயெருதெனப்படுமே ரு
நூபுரமென்பது பாதகிண்கிணியாம் சா
நூழிலர் தானேவாணிகராகும் எ
நூழைதானே நுழைவாயிலாகும் அ
நூறைதானேமலங்கெனலாகும் கூ

நூமுதலொருபேர்முற்றும்.

நூமுதலிருபெயர்

நூலோர் தானேயந்தணருடனே
மந்திரிகளுமெனமருவுமிருபெயர் க0

நூமுதலிருபேர்முற்றும்.

நூமுதலைம்பெயர்

நூழிருனேயானையுங்கொடியுஞ்
*செக்குந்திரையுங்கோறலுமைம்பெயர் கக

நூமுதலைம்பேர்முற்றும்.

நூமுதலறுபெயர்

நூலேயிழையுங்கொடியுமெண்ணலும்
வேதமுநூலுஞ்சாத்திரமுமறுபெயர் கஉ

நூமுதலறுபேர்முற்றும்.

நூமுதற் பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—கசுச.

நெம்முதற் பலபெயர்ச் சூத்திரம்.

நெம்முதலொருபெயர்.

நெறியோனென்பது பெரியோனாகும் க
நெற்கடையென்பது மூலநாளெனுமே உ
நெகிழியென்பது நெருப்பெனலாகும் ங
நெமிரல்தானேசோறெனப்படுமே ச
நெரிதரலென்பது பாறலாகும் ரு
நெய்த்தோர் தானேயுதிரமாகும் சு
நெய்யரியென்பது பன்றுடைப்பெயர் எ
நெறுவென்பது வேயோசையாகும் அ

நெம்முதலொருபேர்முற்றும்.

நெம்முதலிருபெயர்

நெல்லேவாகையுநெல்லுமிருபெயர் க
நெஞ்சேமனமுமார்புமிருபெயர் கO

* சேகும் என்பது பி-ம்.

நெட்டியென்பதுவேயெலும்புநெட்டியும் கக
நெடுமையேபெண்மயிரும்வார்தலும் கஉ
நெற்றியேநுதல்படைவகுப்பிருபெயர் கங
நெறியேமுத்தியும்வழியுமிருபெயர் கச

நெம்முதலிருபேர்முற்றும்.

நெம்முதன்முப்பெயர்

நெய்தலேயோர்நிலமுமோர்பூவுஞ்
சாப்பறையெனவுஞ்சாற்றுமுப்பெயரே கரு

நெம்முதன்முப்பேர்முற்றும்.

நெம்முதற் பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—கள்கூ.

நேமுதற் பலபெயர்ச்சூத்திரம்.

நேமுதலொருபெயர்

நேடலென்பதுதேடலாகும் க
நேர்திறமென்பதுபாலையாழாம் உ
நேயவைதானேதிரையெனலாகும் ங
நேரமென்பதுபொழுதெனப்படுமே ச
நேளியென்பது தாமஸ்ரயாகும் ரு

நேமுதலொருபேர்முற்றும்.

நேமுதலிருபெயர்

நேர்தலென்பதுவேயுடன்படலுடனே
யணுகலெனவுமாகுமிருபெயர் சு
நேத்திரமேபட்டாடைகண்ணிருபெயர் எ

நேமுதலிருபேர்முற்றும்.

நேமுதன்முப்பெயர்

நேயந்தானேயன்புமெண்ணெயு
நெய்யுமெனவேநிகழுமுப்பெயரே அ

நேமுதன்முப்பேர்முற்றும்.

நேமுதனூற்பெயர்

நேர்தலென்பதுவேயிசைதலுமெதிர்தலு
நேர்படலுடனேவேண்டலுநாற்பெயர் கூ

நேமுதனூற்பேர்முற்றும்.

நேமுதலறுபெயர்

நேமியேயோர்புள்ளும்பூமியுங்
கடலும்வட்டமுமோர்சகுனமுமுடன்
சக்கரமெனவுஞ்சாற்றுமறுபெயர் க0

நேமுதலறுபேர்முற்றும்.

நேமுதற்பத்துப்பெயர்

நேரென்பதுவேயீதலும்பாதியு
நிகருமஞ்சமுந்தனியுஞ்சமமு
நுட்பமுமனனுமுடன்பாடடனே
தனிப்பாடெனவுந்தருமொருபான்பெயர் கக

நேமுதற்பத்துப்பேர்முற்றும்.

நேமுதற் பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—ககூ0.

நைம்முதற் பலபெயர்ச்சூத்திரம்.

நைம்முதலொருபெயர்

நைசிகமென்பது மருந்தெனலாகும் க
நைச்சிதானேகாக்கையாகும் உ
நையமென்பது பாம்பெனலாகும் ங
நைவளமென்பது குறிஞ்சியாழ்ப்பெயரெ ச

நைம்முதலொருபேர்முற்றும்.

நைம் முதலிருபெயர்

நைவனமேநடம்வீரரிருபெயர் ரு

நைம்முதலிருபேர்முற்றும்.

நைம்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—ககூரு.

நொம்முதற்பலபெயர்ச்சூத்திரம்.

நொம்முதலொருபெயர்

நொசிவென்பதுவேநுண்மையாகும் க

நொதுமலர்தானேயயலோராகும் உ

*நொய்வென்பதுவேநொய்ம்மையாகும் ௩

நொம்முதலொருபேர்முற்றும்.

நொம்முதலிருபெயர்

நொறிலேவிரைவுநுடக்கமுமிருபெயர் ச

நொடியேகிளவிநொடியெனவிருபெயர் ரு

நொம்முதலிருபேர்முற்றும்.

நொம்முதன்முப்பெயர்

நொச்சியென்பதுமதிலுநொச்சியுஞ்
சிறூரெனவுஞ்செப்புமுப்பெயரே சு

நொம்முதன்முப்பேர்முற்றும்.

நொம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உ0க.

நோமுதற் பலபெயர்ச்சூத்திரம்.

நோமுதலொருபெயர்

நோவுறுனேயப்பமாகும் க

நோனென்பதுவேவலியெனலாகும் உ

நோன்றல்தானேபொறுத்தலாகும் ௩

நோமுதலொருபேர்முற்றும்.

நோமுதலிருபெயர்

நோக்கேவிழியுமழகுமிருபெயர் ச

நோற்றலேபொறைதவம்பண்ணலிருபெயர் ரு

நோன்மையென்பது தவம்பண்ணுமையும்
பொறுமையுமெனவேபோற்றுமிருபெயர் சு

* நொவ்வு என்பது பி-ம்,

நோனுறென்பது தவமில்லார்களும்
பகைவரெனவும்பகருமிருபெயர் எ

நோமுதலிருபேர்முற்றும்.

நோமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உ0அ.

நௌமுதலிருபெயர்

நௌவியேமான்மரக்கலமிருபெயர் க

நௌமுதலிருபேர்முற்றும்.

ஆகச்சூத்திரம்—உ0கூ.

பகர்தரும்புலியூர்க்கங்கைகுலாதிப
னருள்பெறுசிதம்பரரேவணனறைதரு
நகராதிப்பெயர்த்தொகுதியாறுவதிற்
சூத்திரமுப்பதிற்றேழொன்றுமே.

ஆறுவது:

நகராதிப்பெயர்த்தொகுதிமுற்றும்.

ஏழாவது:

# பகராதிப்பெயர்த்தொகுதி.



சித்திரசேனன்றனக்கொருநாலு
புத்திரர்தரும்புனிதனைப்போற்றிப்
பகராதிப்பெயர்த்தொகுதியைப்பகர்வாம்.

பம்முதற்பலபெயர்ச்சூத்திரம்.

பம்முதலொருபெயர்

பகன்றையேகிலுகிலுப்பையாகும் க
பகண்டைதானேசிவதையெனப்படும் உ
பகீரதியென்பது கங்கையெனப்படும் ங
பகையகந்தானேபோர்க்களமாகும் ச
பங்கயமென்பது தாமரையாகும் ரு

பசுக்காவலரேவாணிகராகும் ௬
பஞ்சானனமேசிங்கமெனப்படும் ௭
பஞ்சிகந்தானே தாளியாகும் ௮
படித்திரமென்பது சூட்டிறைச்சிப்பெயர் ௯
பஞ்சாய்தானேகோரையெனப்படும் ௧௦
பஞ்சவனென்பது பாண்டியனாகும் ௧௧
பஞ்சுகந்தான்பெருமையாகும் ௧௨
படலையென்பது மாலையாகும் ௧௩
படிதந்தானேகூத்தெனலாகும் ௧௪
படிவரென்பது துறந்தோர்பெயரே ௧௫
படிகந்தானேபளிங்கெனலாகும் ௧௬
படுகாடென்பது சுடுகாடாகும் ௧௭
பண்டரேபாடற்கீழ்மக்கள் ௧௮
பண்டரங்கந்தான்சிவனாடலாகும் ௧௯
பண்ணியமென்பது பண்டமெனப்படும் ௨௦
பதங்கனேசூரியன்பேராகும் ௨௧
பதடியென்பது பதரெனலாகும் ௨௨
பதக்கந்தானேயாரமாகும் ௨௩
பதப்பாடென்பது மதிலுறுப்பாகும் ௨௪
பதாகைதானே துகிற்கொடியாகும் ௨௫
பதியரியென்பது நாற்றெனலாகும் ௨௬
பத்திரந்தானேகுதிரைப்பந்தியாம் ௨௭
படைத்தோனென்பது பிரமன்பெயராம் ௨௮
பதுமராகமேமாமணியாகும் ௨௯
பரியங்கந்தான்கட்டிலெனப்படும் ௩௦
பரசுதானேமழுவெனலாகும் ௩௧
பராதரமென்பது காக்கையாகும் ௩௨

பரியந்தந்தானெல்லையெனப்படும் ௩௩
பரிசனமென்பதேவல்செய்வோர்பெயர் ௩௪
பரியாளந்தான்பரிவாரப்பெயர் ௩௫
பரியாயமென்பது பலமுறையெனுமே ௩௬
பழங்கணென்பது புன்கண்மையாகும் ௩௭
பலவிதமேநானாவிதமாகும் ௩௮
பரிச்சனியமென்பது மழைமேகமாகும் ௩௯
பருப்பதிதானேயுமையவளாகும் ௪0
பரிவயமென்பது தண்டுலமாகும் ௪௧
பருடிதானேநாடெனலாகும் ௪௨
பலாலமென்பது வைக்கோலாகும் ௪௩
பல்லணமென்பது கல்லணையாகும் ௪௪
பவித்திரந்தானே தூய்மையாகும் ௪௫
பல்லவமென்பது தளிரெனப்படுமே ௪௬
பஃறிதானேமரக்கலமாகும் ௪௭
பழிசியென்பது செம்பெனலாகும் ௪௮
பழிச்சல்தானேவாழ்த்தலாகும் ௪௯
பழுவமென்பது காடெனலாகும் ௫0
பணித்து த்தானேகற்பூரப்பெயர் ௫௧
பறந்தலையென்பது பூசற்களமாம் ௫௨
படீரந்தானேசந்தனமாகும் ௫௩
பறழென்பதுவேகுட்டியாகும் ௫௪
பரிவிலனென்பதிராவணன்பெயரே ௫௫
பற்றையேசெங்காந்தளாகும் ௫௬
பனிப்பென்பதுவேநடுக்கமாகும் ௫௭
பரடென்பதுவேகரடெனலாகும் ௫௮
பனசந்தானேபலாவெனப்படுமே ௫௯

பன்னகவயிரியேகருடனாகும் சுO
பன்னகந்தானேயுரகமாகும் சுக
பன்னமென்பதுவேயிலையெனப்படுமே சுஉ
பஞ்சதாரையென்பதுசருக்கரை சுங

## பம்முதலொருபேர்முற்றும்.

## பம்முதலிருபெயர்

பகமேயோனியுங்கொக்குமிருபெயர் சுச
பசும்பையேமயிர்பசும்பையிருபெயர் சுரு
படலிகைதானேபெரும்பீர்க்குடனே
பாந்தவட்டக்கைம்மணியிருபெயர் சுசு
பஞ்சரமென்பதுகூடுஞ்செருந்தியும் சுஎ
பட்சியென்பதுகுதிரையும்பட்சியும் சுஅ
படாமேயிடுதிரையாடையிருபெயர் சுகூ
படிவமென்பதுவடிவமுநோன்பும் எO
படிறேகளவும்பொய்யுமிருபெயர் எக
பட்டிமையேவஞ்சனைகளவிருபெயர் எஉ
பட்டாரகரேயருகருந்தேவரும் எங
பண்ணவரேதுறந்தோருந்தேவரும் எச
பண்டிதானேயானையும்பண்டியும் எரு
பதவியேவழிபதவியிருபெயர் எசு
பறவைதானேபொழுதும்பறவையும் எஎ
பதனமேயாணையிருபெயர் எஅ
பம்பரம்பம்பரமேருவிருபெயர் எகூ
பயோதரமேமுலைபுயலிருபெயரே அO
பரவலென்பதுதொழுதலும்பரத்தலும் அக
பரப்பேகடலும்பரப்புமிருபெயர் அஉ
பரித்தலேயறுத்தலுஞ்சுமத்தலும் அங

பரிகாரந்தானகழும்பரிகாரமும் அச

பந்தென்பது நீர் தூவுந் துருத்தியுங்
கந்துகமெனவுங்காட்டுமிருபெயர் அரு

பரிபுரமென்பது பாதகிண்கிணியு
மணியுமெனவேமருவுமிருபெயர் அசு

பருப்பேபருமனும்பருப்புமிருபெயர் அஎ

பருக்கையேகாழ்பருக்கையிருபெயர் அஅ

பகழியேகுதையம்பெனவிருபெயர் அகூ

பறம்பேமலையுங்கொங்கையுமிருபெயர் கூ0

பகுதியென்பது கூட்டமும்பகுதியும் கூக

பாதர்தானேநாய்கருங்கழியரும் கூஉ

படங்கென்பது பெருங்கொடியுமேற்கட்டியும் கூங

பகர்தரூனேவிற்றலும்பேசலும் கூச

பட்டென்பதுசிற்றூரும்பட்டாடையும் கூரு

பண்டமேபணிகாரமும்பொன்னும் கூசு

பதங்கமேபுட்பொதுவும்விட்டிலும் கூஎ

பராகமென்பதுவேமலரின்றாரு
மிரேணுவுமெனவேயிருபெயராகும் கூஅ

பளிதமென்பது பல்லமென்கணக்குங்
கற்பூரமுமெனக்காட்டுமிருபெயர் கூகூ

பணிலமேசலஞ்சலஞ்சங்கிருபெயர் க00

பனுவலே நூல்கிளவியிருபெயர் க0க

பயம்பேபள்ளமும்யானைவீழ்குழியும் க0உ

பண்ணவன்றானேயருகனுமுனிவனும் க0ங

படப்பையென்பது நாட்டிற்புறமுந்
தோட்டமுமெனவேசொல்லுமிருபெயர் க0ச

பனித்தலென்பது விடாமழையதனொடு
கொடுத்தலுமெனவேகூறுமிருபெயர் க0ரு

பங்கியேபிறமயிருமாண்மயிரும் ௧0௬
பங்கயனேயயனிரவியிருபெயர் ௧0௭

பம்முதலிருபேர்முற்றும்.

## பம்முதன்முப்பெயர்

பணமேயுரகமும்பாம்பின்படமும்
பணமுமெனவேபகருமுப்பெயரே ௧0௮

பட்டிதானேகளவும்பட்டியும்
பிள்ளையுமெனவேபேசுமுப்பெயரே ௧0௯

பசுவேயேறுஞ்சீவனும்பெற்றமும் ௧௧0

பகையென்பதுவேயடித்தலுஞ்சார்தலும்
பகையுமெனவேபகருமுப்பெயரே ௧௧௧

பலவமென்பதுகாயும்பழமுங்
குழியுமெனவேகூறுமுப்பெயரே ௧௧௨

பரிவென்பதுவேயின்பமுந்துன்பமு
மன்புமெனவேயாகுமுப்பெயரே ௧௧௩

பருவரலென்பதுபொழுதுந்துக்கமுஞ்
சுடுமாவெனவுஞ்சொல்லுமுப்பெயரே ௧௧௪

பல்லமேயோர்கணக்கும்பாணமுங்
கரடியுமென்றேகருதுமுப்பெயரே ௧௧௫

பழமைதானேவேண்டற்பாடும்
பழமையும்யானையும்பகருமுப்பெயரே ௧௧௬

பழுதென்பதுவேகுற்றமுநிறைவு
மிடமுமெனவேயிசைக்குமுப்பெயரே ௧௧௭

பறவைதானேயிறகும்பறவையும்
பிறவுண்டியுமெனப்பேசுமுப்பெயரே ௧௧௮

பணவைதானேயளவும்பறவையும்
பரணுமெனவேபகருமுப்பெயரே ௧௧௯

பங்கென்பதுவேமுடமும்பாதியுஞ்
சனியுமெனவேமுப்பெயர்சாற்றும் ௧௨0

பாவையென்பது திருமகளாடலும்
பாப்புங்கடலும்பகருமுப்பெயரே கஉக

பரிதலென்பதுவேயறுத்தலுமிரங்கலு
மன்புமெனவேயாகுமுப்பெயரே கஉஉ

பட்டிகைதானேயிரதமும்பணையுங்
கச்சுமெனவேமுப்பெயர்காட்டும் கஉரு

பலாசுதானேபச்சைநிறமும்
பன்னமுமோர்மரமெனவுமுப்பெயரே கஉச

பம்முதன்முப்பேர்முற்றும்.

பும்முதனாற்பெயர்

பதலேயேதண்ணுமையுந்தாழியும்
வெற்புமோர்கட்பறையுநாற்பெயரே கஉரு

பலமென்பதுவேகனியும்பயனுங்
காயும்பலமுங்கருதுநாற்பெயரே கஉசா

பச்சையேமரகதமுந்தோலும்
புதனுநிறமும்போற்றுநாற்பெயரே கஉஎ

பதுக்கையென்பது பாறையுந்தூறும்
பாலையுஞ்சிறுதிட்டெனுநாற்பெயரே கஉஅ

பரிகமென்பதுகணையுமதிலுங்
கிடங்குமேடையுங்கிளக்குநாற்பெயரே கஉகூ

படுதலேயுண்டாதலும்பூத்தலு
மொலியுமில்லாமையுமெனநாலே கரு0

பத்தியேவழிபாடுமொழுக்கமு
மடைப்பதுமுறையுமாமெனுநாற்பேர் கருக

படியேபூமியுங்குணமும்பகையு
மங்கவடியுமாகுநாற்பெயரே கருஉ

படகமேயொருவாச்சியம்பணவை
கவரிமாப்பாணெனவொருநாற்பெயர் கருரு

படமேபாம்பின்படமுந்துகிலு
மெழுதுபடாமுங்குஞ்சரமுகத்தின்
படாமுமெனவேபகருநாற்பெயரே கருச

பக்கமென்பது பறவையினிறகு
நட்புந்திதியுமருகுநாற்பெயர் கரு௫

பன்னல்தானெநெருக்கமுந்தேர்தலும்
பருத்தியுஞ்சொல்லலும்பரவுநாற்பெயரே கரு௬

பம்முதனாற்பேர்முற்றும்.

பம்முதலைம்பெயர்

பகடேயானையுங்கடாவுமெருது
மோடமும்பெருமையுமோதுமைம்பெயரே கரு௭

பல்லியமென்பது புரவியின்பந்தியும்
பாணியுந்தொங்கலுமருதநிலமும்
வாச்சியமெனவும்வழங்குமைம்பெயரே கரு௮

பண்ணென்பதுவேபாட்டும்பண்ணு
மாதர்கூத்துநீரினிலையுங்
கலணையுமெனவேகாட்டுமைம்பெயரே கரு௯

பகவனேசிவன்மாயனுன்முக
னருகனும்புத்தனுமாகுமைம்பெயரே கசo

பனையேயானையுமனுடமும்பெருமையு
மிதழுமோர்மரமுமென்னுமைம்பெயரே கசக

பங்கமென்பதுமுடமும்பின்னமுஞ்
சேறுந்தூசுந்தோல்வியுமைம்பெயர் கச௨

பம்முதலைம்பேர்முற்றும்.

பம்முதலறுபெயர்

பதியேயூருஞ்சிவனுங்கேள்வனுங்
குதிரையும்பிறையுமுத்தோருமறுபெயர் கச௩

பரிதியேபரிவேடமுமிரவியும்
வட்டமுமொளியுமுடனேபொன்னு
நேமியுமெனவேநிகழ்த்துமறுபெயர் கச௪

படையேநிரையுங்கலப்பையாயுதமுங்
கலணையும்படுக்கையும்படையுமாறே கச௫

பவனமேமனைநாடுபொழுது
பூமியிராசிகாற்றெனவாறே கசசு

பந்தமேகிளைதளைகட்டுண்டை
பாசங்கைவிளக்கென்னவாறே கசஎ

பத்திரந்தானேயிலைசிறகாயுதம்
வனப்புநன்மைபாணமென்றறுபெயர் கசஅ

பயிரேவிலங்கும்பயிலும்பயிரு
மொருவிதந்து கட்டியவழக்கும்புல்லும்
புள்ளின்குரலும்போற்றுமறுபெயர் கசகூ

பண்ணையேகன்னியர்விளையாட்டு
மாதர்கூட்டமுமருதநிலமு
மிருகந்துயிலிடமுநீரின்றாழ்வும்
வயலுமெனவேமருவுமறுபெயர் கரு0

படுவென்பதுமரக்குலையுங்களரு
நீரினிலையும்வெள்ளியும்பொய்கையும்
*படுவதெனவும்பகருமறுபெயர் கருக

பம்பருனேயெழுச்சியுநெருக்கமுந்
தொடர்தலுடனேவலியும்பொலிவும்
பொன்னுமென்றேபோற்றுமறுபெயர் கருஉ

பலியென்பதுவேசோறும்பூசையும்
பிச்சையுநீறுந்தெய்வவுணவு
மொருதாருவுமெனவோதுமறுபெயர் கருங

பம்முதலறுபேர்முற்றும்.

பம்முதலெழுபெயர்

பகலேநாளுநுகத்திலாணியும்
பாகுபாடுமிரவியுமொளியு
மொருமுகூர்த்தமுநடுச்செயலுமென்றேழ்பெயர் கருச

* சம்பத்தெனவுஞ்சாற்றுமறுபெயர் என்பது பி-ம்.

பட்ரென்பதுவேநடையுநினைப்பு
நோவும்வீரரும்பரிவும்பகையுந்
துகிற்கொடியெனவுஞ்சொல்லுமெழுபெயர் கருரு

பயமென்பதுவேயச்சமுங்குளமும்
பயனும்பாலுஞ்சுவையுநீரும்
பிரமனுமென்றேபேசுமேழ்பெயர் கருசு

பள்ளியென்பதுகோயிலும்பாயலு
நீத்தோருருமிடமுந்துயிலு
மூருஞ்சிற்றூரெனவுமேழ்பெயர் கருஎ

பனியென்பதுவேயச்சமுந்துன்பமு
மிமமுநடுக்கமுங்குளிருமிரவியு
மதியுமெனவேமருவுமேழ்பெயரே கருஅ

பாமென்பதுவேகவசமும்பாமுஞ்
செயலுந்தேகமும்பழமையுமுன்பு
மத்திமாமுமாகுமேழ்பெயரே கருகூ

பம்முதலேழ்பேர்முற்றும்.

## பம்முதலெண்பெயர்

பட்டமேயாயுதமுமோடையும்
பதவியுங்கவரிமாவும்பரிசையுந்
தூசுநுதலணியும்பணவமுமெண்பெயர் கசு0

பருமந்தானேயுயர்ச்சியுங்கலணையு
மொளியுமேகலையுமுடையுங்குதிரையுஞ்
சாணமுமெய்புகுகருவியுமெண்பெயர் கசுக

பம்முதலெண்பேர்முற்றும்.

## பம்முதற்பத்துப்பெயர்

பரியென்பதுவேசுமத்தலுங்காழ்த்தலும்
வருத்தமும்பாதுகாத்தலுங்குதிரையு
மிகுதியுஞ்செலவும்பெருமையுங்கறுப்பும்
விரைவுமென்றேயொருபதுபெயரே கசுஉ

பம்முதற்பத்துப்பேர்முற்றும்.

பம்முதற்பதினொருபெயர்

பணையேவயலும்பருத்தலுமூங்கிலும்
பரியின்பந்தியுமரத்தின்கோடும்
பிழைத்தலுமுரசும்பணைத்தலும்பாணும்
பெருமையுமச்சுவத்தமும்பன்னொருபேர் ககூ௩

பம்முதற்பதினொருபேர்முற்றும்.

பம்முதற்பதின்முப்பெயர்

பதமேவழியும்போதுஞ்செவ்வியும்
வரிசையுஞ்சோறுங்குழைவுஞ்சொல்லுங்
காலுங்காலமுமீரமுஞ்சேமமு
மின்புநற்றாசுமெனப்பதின்முப்பேர் ககூ௪

பம்முதற்பதின்முப்பேர்முற்றும்.

பம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—ககூ௪.

பாமுதற்பலபெயர்ச்சூத்திரம்.

பாமுதலொருபெயர்

பாகசாதனன்றானிந்திரனாகும் க
பாடினியென்பது பாணிச்சிபெயர் உ
பாடலிதானேகள்ளெனலாகும் ௩
பாதகடகமேபாடகமாகும் ௪
பாதுகாத்தலேயோம்பலாகும் ரு
பாந்தள் தானேபெரும்பாம்பாகும் சா
பார்க்கவனென்பது சுக்கிரன்பெயரே எ
பாரணந்தானேயுண்டலாகும் அ
பாவிரியென்பது பசலையாகும் கூ
பார்த்திபர்தானேயரசரெனப்படும் க0
பாலைக்கிழத்தியேதுர்க்கையாகும் கக
பாறலென்பதுசேவெனப்படுமே கஉ

பார்ப்பேபறவைக்குஞ்செனலாகும் கரு

பாற்கரனென்பது பருதியின்பெயராம் கச

பாமுதலொருபேர்முற்றும்.

பாமுதலிருபெயர்

பாகாரேயிடமதிலிருபெயரே கரு

பாசியேமழைபாசியிருபெயர் கசு

பாதிதானே தாறும்பாதியும் கஎ

பாரதிதானேபனுவலாட்டியு
நாவாயெனவுநாட்டுமிருபெயர் கஅ

பாராவாரமேகடலின்கரையுங்
கடலுமெனவேகருதுமிருபேர் கசு

பாராட்டென்பது கொண்டாடுதலுட
னுலாவுதலெனவுமோதுமிருபெயர் உ0

பாலியேயால்கள்ளெனவிருபெயர் உக

பாவகனென்பது தீயின்கடவுளுந்
தீயுமெனவேசெப்புமிருபெயர் உஉ

பாகலென்பது காரவல்லியும்
பலாவுமென்னப்பகருமிருபெயர் உரு

பாதிரியேயோர்மாமுழுமுங்கிலும் உச

பாத்தியேசிறுசெய்யும்பகுத்தலும் உரு

பாங்கரேயிடம்பக்கமிருபெயர் உசு

பாலமேநுதல்பாலமிருபெயர் உஎ

பாமுதலிருபேர்முற்றும்.

பாமுதன்முப்பெயர்

பாக்கமேயூர்மருதநிலத்தூர்
நெய்தனிலத்தூரெனுமுப்பெயரே உஅ

பாடகமென்பது கிழலுஞ்சிவப்பும்
பாடகமெனவும்பகருமுப்பெயரே உகூ

பாக்குத்தானேயிடைச்சொல்லும்பாக்கு
மெதிர்காலமுமெனவிசைக்குமுப்பேரே ௩0

பாசனமென்பது பாண்டமுஞ்சுற்றமு
முண்கலமெனவுமோது முப்பெயரே ௩௧

பாணமேபூம்பட்டுங்கணையு
மேகவண்ணக்குறிஞ்சியுமுப்பேர் ௩௨

பாத்தென்பதுவேசோறுங்கஞ்சியும்
பகுத்திடலெனவும்பகருமுப்பேரே ௩௩

பாலிகைதானேவட்டமுமுதடும்
பட்டவாளின்முட்டியுமுப்பேர் ௩௪

பார்வையென்பதுமதிப்பும்விழியுந்
தீவகமெனவுஞ்செப்புமுப்பேரே ௩௫

பாளிதமேபாற்சோறும்பட்டுங்
கண்டசர்க்கரையுடனுமுப்பேரே ௩௬

பாங்கென்பதுவேபரிசுமெழிலும்
பக்கமுமெனவேபகருமுப்பேரே ௩௭

பாமுதன்முப்பேர்முற்றும்.

பாமுதனாற்பெயர்

பாடலமென்பதுசபதமுங்குதிரையும்
பாதிரியுடனேசிவப்புநாற்பெயரே ௩௮

பாறென்பதுவேபருந்துநித்திலமு
மரக்கலமுடனேகாற்றுநாற்பெயரே ௩௯

பாவென்பதுவேபரவலும்பரப்பு
நூற்பாவுடனேபனுவலுநாற்பெயர் ௪0

பாமுதனாற்பேர்முற்றும்.

பாமுதலைம்பெயர்

பாசமேநூல்பேய்கயிறன்புட
னூசித்துளையெனவோதுமைம்பெயரே ௪௧

பாட்டியேபாணிச்சியும்பன்றியு
நாயுநரியும்பாட்டியுமைம்பெயர் ௪௨

பாரென்பதுவேபுத்தனும்பூமியுந்
தேரினிற்பாப்புங்கல்லின்பரப்பு
மறையோனெனவும்வைக்குமைம்பெயரே — சங

பாமுதலைம்பேர்முற்றும்.

பாமுதலறுபெயர்

பாடேபடுதலும்பெருமையுமோசையும்
பக்கமுமிடமும்பண்புமறுபேர் — சச

பாரியென்பதுகட்டிலுமனைவியுங்
கடலுங்கள்ளுநல்லபுடவையு
மோர்வள்ளலுமெனவோதுமறுபெயர் — சரு

பானலேகடல்குதிரைவெற்றிலை
பழனநெய்தல்களென்றறுபேர் — சசு

பாகமென்பதுபதமுமோரளவு
மொன்றுபாதியுங்கண்டசர்க்கரையும்
பலகூறும்பட்டாடையுமறுபேர் — சஎ

பாமுதலறுபேர்முற்றும்.

பாமுதலெழுபெயர்

பாண்டிலென்பதுவிளக்கின்றகழியும்
வட்டமுங்கட்டிலுமேறுமூர்தியுந்
தாளமும்வேயுஞ்சாற்றுமேழ்பெயரே — சஅ

பாடிபாசறையுமாயருரும்
படையுங்கவசமுநாடுநகரமும்
பேருரெனவும்பேசுமேழ்பெயரே — சகூ

பாமுதலேழ்பேர்முற்றும்.

பாமுதலெண்பெயர்

பாகென்பதுவேபாக்குங்குழம்பும்
பரணிநாளும்பகிர்ச்சியுங்கரையும்
பாகனுஞ்சத்தியுங்கட்டியுமெண்பேர் — ௫0

பாலையேயோர்மரமும்வெம்மையும்
பாடற்சுவையும்பிரியவுரைத்தலும்
பாலைநிலத்தின்பாடலும்பொருண்மேற்
பிரிதலும்புணர்ந்துடன்போதலுமோர்நில
மெனவுமிசைக்குமெண்பேர்தானே ருக

பாலைபகுத்தலும்பக்கமுந்திசையு
மியல்பும்பயமுமிடமுங்கீரமும்
வெண்மையுமெனவேவிதிக்குமெண்பெயரே ருஉ

பாமுதலெண்பேர்முற்றும்.

பாமுதலொன்பான்பெயர்

பாரமென்பதுகவசமும்பொறையுங்
கலணையும்புவியுநிறையும்வன்பாரமு
நீரின்கரையும்விளையாட்டுடனே
மரக்கலமெனவுமருவுமொன்பான்பேர் ருந

பாமுதலொன்பான்பேர்முற்றும்.

பாமுதற்பத்துப்பெயர்

பாணியென்பதுசோலையும்பண்டமும்
பாடலுநாடும்பற்றுமோசையு
நீருங்கையுநெடும்போதுடனே
பல்லியமெனவும்பத்துப்பேராம் ருச

பாமுதற்பத்துப்பேர்முற்றும்.

பாமுதற்பதினொருபெயர்

பாழியேமுழையும்விலங்கின்படுக்கையும்
பாயலும்விண்ணும்பாழுங்கடலும்
படலும்வலியோடுரையுமூரும்
பற்றிலாருரும்பதினொருபெயரே ருரு

பாமுதற்பதினொருபேர்முற்றும்.

பாமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உகசு.

## பிம்முதற் பலபெயர்ச்சூத்திரம்.

### பிம்முதலொருபெயர்

பிங்கலனென்பது குபேரனாகும் க
பிஞ்சந்தானேயிறகெனலாகும் உ
பிடவமென்பது மரக்கோடாகும் ங
பிட்டகமேசிற்றுண்டியாகும் ச
பிசிலென்பதுவேசோறெனலாகும் ரு
பிபீலிகைதானேயெறும்பெனலாகும் சு
பிண்டபாகமேபிச்சையாகும் எ
பிதாமகனென்பது பிரமன்பெயரே அ
பித்திகையென்பது சிறுசெண்பகமாம் கூ
பித்தைதானேமாதர்மயிராம் க0
பிரம்பமென்பது கோவைக்கொடியாம் கக
பிறக்கந்தானேமரக்கொம்பாகும் கஉ
பிரற்றலென்பதுவேயோசையாகும் கங
பிரமரந்தானேவண்டெனலாகும் கச
பிசுமந்தமென்பதுவேம்பெனலாகும் கரு
பிரியென்பதுவேவெருகெனலாகும் கசு
பிராவந்தானேமலையெனப்படுமே கஎ
பில்லியென்பது பூனையாகும் கஅ
பிராகிருதந்தான்வடமொழியெனப்படும் ககூ
பிசிரென்பதுவே திவலையாகும் உ0
பிசனியேகள்ளெனவியம்பினரே உக
பின்னகமென்பது மயிர்முடியாகும் உஉ
பிளிறலுரனேயோசையாகும் உங
பிள்ளுவமென்பது குஞ்சரத்தின்பெயர் உச
பிறக்கடையென்பது புறக்கடையாகும் உரு

பிறழாமைதானேபோரமையாகும் உசு
பிழியென்பதுவேகள்ளெனலாகும் உஎ

பிம்முதலொருபேர்முற்றும்.

பிம்முதலிருபெயர்

பிணரேகோங்குசர்ச்சரையிருபேர் உஅ
பிங்கமேகுராற்பசுவும்பூனையும் உகூ
பிங்கலையேயோர்வாயுவுமாங்தையும் ௩0
பிடகமேதந்திரமும்வேதமும் ௩க
பிணவலேநாய்பெண்ணெனவிருபெயர் ௩உ
பித்தனென்பதுகள்ளனும்பித்தனும் ௩௩
பித்திகையென்பதுவேசுவர்த்தலமுங்
கருமுகையெனவுங்காட்டுமிருபெயர் ௩ச
பிரமசரியமென்பதுதவமு
மறையோரெனவுமருவுமிருபேர் ௩௫
பிறக்கேபின்புறம்வாழ்வெனவிருபேர் ௩சு
பிறவினையென்பதுகாமமும்பாவமும் ௩எ
பிறங்கடையேவழியசலெனவிருபேர் ௩அ
பிறந்தையேபவம்பாவமிருபேர் ௩கூ
பிலவங்கமென்பதுதேரையுங்குரங்கும் ச0
பிண்டமென்பதுபிச்சையுந்திரளையும் சக
பின்னையென்பதுமாயோன்றேவியும்
பித்தையுமெனவேபேசுமிருபேர் சஉ
பிசுனனென்பதுபொய்யனுங்கோளனும் ச௩
பிறழ்வேயவிர்தலும்பெயர்தலுமிருபேர் சச
பிப்பிலந்தானேயச்சுவத்தமுந்
திப்பிலியெனவுஞ்செப்புமிருபெயர் ச௫
பிணியேகட்டுநோயுமிருபேர் சசு

பிம்முதலிருபேர்முற்றும்.

## பிம்முதன்முப்பெயர்

பிசிதந்தானேயிறைச்சியும்வேம்பு
நீருமெனவேநிகழ்த்துமுப்பெயரே — ௪எ

பிச்சமேவெண்குடையுமாண்மயிரும்
பீலிக்குடையும்பேசுமுப்பெயரே — ௪அ

பிண்டியேசெண்மாவுமசோகும்
பிண்ணாக்கெனவுமுப்பேர்பேசும் — ௪௯

பிணிமுகமென்பதுமயிலுமெகினமும்
புள்ளின்பொதுவுமுப்பேர்போற்றும் — ௫0

பிளவுதானேபெட்டியும்வசியுங்
கட்டுமெனவேகருதுமுப்பேரே — ௫க

பிசியென்பதுவேசோறும்பொய்யு
நற்பொருளெனவுநாட்டுமுப்பெயரே — ௫உ

பிதிரென்பதுவேநொடியுந்தூவலுங்
கதையுமெனவேகாட்டுமுப்பேரே — ௫௩

பிறழ்தலுனேபெயர்தலுநடுக்கமு
மொளிவிடலெனவுமோதுமுப்பெயரே — ௫௪

பிள்ளையென்பதுவேகாரிப்புள்ளு
மகவும்வயிரவனுமுப்பெயரே — ௫௫

பிம்முதன்முப்பேர்முற்றும்.

## பிம்முதனாற்பெயர்

பிணையேயாசையும்விலங்கின்பெண்ணு
நவ்வியும்பிணையுநாற்பெயராகும் — ௫௬

பிரசமென்பதுவண்டுங்கள்ளுந்
தேனுந்தேனீயெனவுநாற்பெயரே — ௫எ

பிரம்பேயரிசியுங்கடலும்பிரம்பு
நெய்யுமெனவேநிகழ்த்துநாற்பெயரே — ௫அ

பிதாவென்பதுவேபிரமனுநாரையுந்
தாதையுஞ்சிவனுமெனநாற்பெயரே — ௫௯

பிம்முதனாற்பேர்முற்றும்.

பிம்முதலெழுபெயர்

பிறங்கலுனேயிறையுமுயரமு
மிருதியும்வெற்புநிறைவும்பெருமையு
மோக்கமெனவுமோதுமேழ்பெயர் ௨௦

பிம்முதலேழ்பேர்முற்றும்.

பிம்முதற்பன்னிருபெயர்

பிரமமென்பதுமாயனும்பிரமனு
மிரவியுநிலவுந்தீயும்வேதமு
ஞானமுமுத்திப்பதமும்வேள்வியு
மந்திரமும்வேதாந்தத்துடனே
யிருடிகளெனவும்பன்னிருபேராம் ௨௧

பிம்முதற்பன்னிருபேர்முற்றும்.

பிம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உ௮௦.

பீமுதற் பலபெயர்ச்சூத்திரம்

பீமுதலொருபெயர்

பீடமென்பதுகோயிலாகும் ௧
பீதாம்பரனேமாயோன்பேராம் ௨
பீந்துதலென்பதுகொடுத்தலாகும் ௩
பீதிதானேபயமெனப்படுமே ௪
பீடிகையென்பதுபீடமாகும் ௫

பீமுதலொருபேர்முற்றும்.

பீமுதலிருபெயர்

பீலித்தண்டமேபிண்டிபாலமு
மெஃகமுமெனவேயிசைக்குமிருபேர் ௬
பீனமென்பதுபாசியும்பருமையும் ௭
பீருவென்பதுவேயஞ்சினோன்பேரும்
புருவமுமெனவேபோற்றுமிருபேர் ௮

பீமுதலிருபேர்முற்றும்.

பீமுதன்முப்பெயர்

பீரமென்பதுபீர்க்கும்வாகையும்
பூவரசெனவும்புகலுமுப்பெயரே ௯

பீரென்பதுவேபீர்க்கும்பசலையு
முலைப்பாலெனவுமொழியுமுப்பெயரே ௧0

பீமுதன்முப்பேர்முற்றும்.

பீமுதனாற்பெயர்

பீதகமேயிருவெலியுஞ்சாந்தும்
புன்மையும்பொன்னும்போற்றுநாற்பெயரே ௧௧

பீமுதனாற்பேர்முற்றும்.

பீமுதலேழ்பெயர்

பீலியென்பதுமலையுங்கலாபியுந்
தோகையும்பொன்னுமாலவட்டமும்
வாச்சியமுஞ்சிறுச்சின்னமுமேழ்பெயர் ௧௨

பீமுதலேழ்பேர்முற்றும்.

பீமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௨௯௨.

பும்முதற்பலபெயர்ச்சூத்திரம்

பும்முதலொருபெயர்

புக்கிலென்பதுவேயகமெனப்படுமே ௧
புங்கவர்தானேதேவராகும் ௨
புஞ்சமென்பதுதிரட்சியாகும் ௩
புணியென்பதுவே*மயிர்முடியாகும் ௪
புண்ணீர்தானேசெந்நீராகும் ௫
புருண்டியென்பதுமல்லிகையாகும் ௬
புதளிதானேபுலாலெனப்படுமே ௭
புதரென்பதுவேதொக்கெனலாகும் ௮

* மணிமுடி என்பது பி-ம்.

புயங்கந்தானேயுரகமாகும் கூ
புரந்தரனென்பதுதேவேந்திரனும் க0
புராதனந்தானேபழமையாகும் கக
புரியமென்பதுகூத்தெனப்படுமே கஉ
புரூரமென்பதுபுருவமாகும் கங
புரிசைதானேமதிலெனப்படுமே கச
புரூணந்தானேயிளமையாகும் கரு
புருவமென்பதுபுருவமாகும் கசு
புரோசரென்பவர்குறுநிலவேந்தர் கஎ
புல்லரேகீழ்மக்களாகும் கஅ
புல்லகண்டமேயொருகரும்பின்பேர் ககூ
புல்லந்தானேயெருதெனலாகும் உ0
புன்கென்பதுவேபுனமுருங்கைப்பேர் உக
புலர்தலென்பதுகாய்தலாகும் உஉ
புழலென்பதுவேயுட்டுளையாகும் உங
புழுக்கல்தானேசோறெனலாகும் உச
புளகமென்பதுகளிப்புறலாகும் உரு
புளிஞர்தானேவேடராகும் உசு
புளினமென்பதுமணற்குன்றின்பேர் உஎ
புள்ளந்தானேகொடுவாளாகும் உஅ
புள்ளரசென்பதுகருடனாகும் உகூ
புறங்காடென்பதுசுடுகாடெனப்படும் ங0
புட்கலாவர்த்தமேமேகமாகும் ஙக
புன்னகமென்பதுபுன்னையாகும் ஙஉ
புனற்கரசன்றான்வருணனாகும் ஙங

பும்முதலொருபேர்முற்றும்.

பும்முதலிருபெயர்

புணையேமூங்கில்தெப்பமிருபெயர் ௩௪
புதனென்பதுவேயறிவுடையோனும்
புதனுமெனவேபோற்றுமிருபேர் ௩௫
புதைதல்தானேயம்புக்கட்டும்
கைத்தளமெனவுங்கருதுமிருபேர் ௩௬
புரவலனென்பதுவள்ளலும்வேந்தனும் ௩௭
புரத்தலேயுபகாரமுங்காத்தலும் ௩௮
புலவென்பதுபுலான்முடையிருபெயரே ௩௯
புலத்தலேயூசுதலும்புலத்தலும் ௪0
புளியேபுளிதித்திப்பெனவிருபெயர் ௪௧
புளித்தலேசெறிதலும்புளிப்பும் ௪௨
புள்ளியென்பதுநண்டும்புள்ளியும் ௪௩
புறம்பணைதானேகுறிஞ்சிநிலமு
முல்லைநிலமுமொழியுமிருபெயர் ௪௪
புனிதனேசிவன்றூயோனிருபேர் ௪௫
புகையேயோசனைதூமமிருபேர் ௪௬
புணர்வேதோயலிசைப்பெனவிருபேர் ௪௭
புதையேபுதுமையுங்கணையின்கட்டும் ௪௮
புவனமேநீர்புவியெனவிருபேர் ௪௯
புறமேமுதுகுவீரமிருபேர் ௫0
புத்தேளென்பதுதெய்வமும்புதுமையும் ௫௧
புந்தியேபுதன்அறிவெனவிருபேர் ௫௨

பும்முதலிருபேர்முற்றும்.

பும்முதன்முப்பெயர்

புள்ளேயவிட்டம்வண்டுபுண்மூப்பேர் ௫௩
புகழென்பதுவேயகத்தியும்புகழும்
வசையுமெனவேமருவுமுப்பேர் ௫௪

புட்டமென்பதுகாகமுந்தூசு
நிறைவுமெனவேநிகழ்ந்துமுப்பேர் ருரு

புதலென்பதுவேபுருவமும்பூடு
மோர்புல்லெனவுமுரைக்குமுப்பேரே ருசு

புலியேசாந்தும்புலியுஞ்சிங்கமும் ருஎ

புள்ளுவனென்பதுகனியும்வேடனும்
வஞ்சனையெனவுமருவுமுப்பேரே ருஅ

புறவமென்பதுபுறவுங்காடு
முல்லைநிலமுமுப்பேர்கூறும் ருகூ

புற்றென்பதுவேயெழுத்துத்தலையும்
புற்றுமெனவேபுகலுமுப்பேரே சுO

புகலென்பதுவேவார்த்தையுமுடம்புங்
குதிருமெனவேகூறுமுப்பேர் சுக

புகரேபுன்மைநிறமுங்குற்றமுஞ்
சுக்கிரனெனவுஞ்சொல்லுமுப்பேரே சுஉ

புரமேயுடலும்புரியுமுன்னுமாம் சுரு

புத்தன்றானேயருகனும்புத்தனுஞ்
சீதரனெனவுஞ்செப்புமுப்பேரே சுச

புணரியேயுயர்கரையுங்கடலுங்
கடற்றிரையெனவுங்கருதுமுப்பேரே சுரு

புன்கணென்பதுமெலிவுநோயுந்
துன்பமுமெனவேசொல்லுமுப்பேர் சுசு

புரிவேவிரும்பலும்வேறுபடலுஞ்
சொல்லுமெனவேசெப்புமுப்பேரே சுஎ

பும்முதன்முப்பேர்முற்றும்.

பும்முதனாற்பெயர்

புங்கமேநற்றாசுங்கணையு
மம்புக்குதையுமுயரமுநாற்பேர் சுஅ

புலம்பலென்பதுவேயச்சமும்புலம்பலுந்
தனியுமொலியுஞ்சாற்றுநாற்பேரே சுகூ

புறமேகுறிஞ்சிநிலமும்புறம்பு
முல்லைநிலமுந்தோலுநாற்பெயர் எ௦

பும்முதனாற்பேர்முற்றும்.

பும்முதலறுபெயர்

புரியேவிரும்பலுஞ்சேறலும்புரமுங்
கயிறுங்கட்டுஞ்சங்குமறுபேர் எக

புரையேயுயர்வுமுவமையுங்குற்றமும்
புரையுமில்லமும்பழுதுடனறுபேர் எ௨

பும்முதலறுபேர்முற்றும்.

பும்முதலேழ்பெயர்

புல்லேபுணர்ச்சியும்புன்மையும்புதனும்
புலியும்பனையுமனுடநாளும்
புல்லுமெனவேயோற்றுமேழ்பேர் எ௩

புலவரேபாடுநருந்தேவரும்
பொருநருங்கூத்தரும்புதனும் புலவரு
மறிஞருமெனவேயாகுமேழ்பெயரே எ௪

புலமேயிடமுநடுக்கமுந்தனிமையுந்
திரையும்புந்தியும்விளைவுறுநிலமு
மைம்புலனெனவுமெழுபெயராகும் எரு

பும்முதலேழ்பேர்முற்றும்.

பும்முதற்பத்துப்பெயர்

புட்கரமேயாகாயமுநீரு
நிறைவும்வாளுங்குருகுந்தீர்த்தமும்
பாண்டமுகமுமிபக்கைந்துணியும்
பங்கயஞ்சேனமெனவொருபான்பெயர் எசு

பும்முதற்பத்துப்பேர்முற்றும்.

பும்முதற்பதின்மூப்பெயர்

புண்டரீகமேமாயனும்புற்றுஞ்
சிங்காசனமுங்கவரியும்வண்டுங்

தேவேந்திரனுமோர்பூடுமோர்நோயுங்
குடையும்புலியும்வனசமுங்கழுகுந்
திக்கயத்தொன்றுமெனப்பதின்மூன்றே எஎ

பும்முதற்பதின்முப்பேர்முற்றும்.

பும்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௩௬௯.

## பூமுதற் பலபெயர்ச் சூத்திரம்

### பூமுதலொருபெயர்

பூசுரரென்பதுவேதியராகும் ௧
பூட்டைதானேசெக்கெனலாகும் ௨
பூட்சியென்பதுவேயுரிமையாகும் ௩
பூதரமேமலையாமெனப்புகல்வர் ௪
பூரியரேகீழ்மக்களாகும் ௫
பூரியென்பதுபொன்னெனலாகும் ௬
பூரிகைதானேயப்பமாகும் ௭
பூவலென்பதுசிவப்பெனலாகும் ௮
பூவம்பனென்பதுகாமன்பெயரே ௯

பூமுதலொருபேர்முற்றும்.

### பூமுதலிருபெயர்

பூழியேயகில்நிலமுமிருபேர் ௧௦
பூசையேயர்ச்சனையும்பூனையும் ௧௧
பூங்கற்றென்பதுபூதமுமழகும் ௧௨
பூமரந்தானேயதிகுறியுடனே
பூமரமெனவும்போற்றுமிருபேர் ௧௩
பூழியென்பதுபுழுதியுஞ்சேறும் ௧௪
பூதியமேயுடல்புவியெனவிருபேர் ௧௫

பூமுதலிருபேர்முற்றும்.

## பூமுதன்முப்பெயர்

பூட்கைதானேயாளியும்யானையு
மேற்கோளெனவுமேவுமுப்பெயரே கசு

பூதியேதுர்க்கந்தமும்பூமியு
நிரயமுமெனவேநிகழ்த்துமுப்பெயரே கஎ

பூகமென்பதுகூந்தற்கமுகுந்
திரளுங்கமுகுஞ்செப்புமுப்பேரே கஅ

பூருவமென்பதுமுதுமையுங்கிழக்கு
முன்புமெனவேமுப்பெயர்கூறும் கக

பூமுதன்முப்பேர்முற்றும்.

## பூமுதனாற்பெயர்

பூவையேகாயாவுங்குயிலு
நாகணவாயுங்கிளியுநாற்பேர் உ0

பூமுதனாற்பேர்முற்றும்.

## பூமுதலெழுபெயர்

பூதமேயுள்ளானுமைம்பூதமுஞ்
சீவனும்பூதமுமிறந்தகாலமு
மாலமாமும்புனிதமுமேழ்பேர் உக

பூவென்பதுவேமலரும்வனப்புங்
கூர்மையும்பொலிவுநீலமும்பூமியுந்
தாமரையெனவுஞ்சாற்றுமேழ்பேர் உஉ

பூமுதலேழ்பேர்முற்றும்.

பூமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—நகக.

## பெம்முதற் பலபெயர்ச் சூத்திரம்

## பெம்முதலொருபெயர்

பெண்மையென்பதுநிறையெனலாகும் க

பெண்டர்தானேயலியராகும் உ

பெட்பேமிகுதியாமெனவிசைப்பர் ந

பெட்டாரென்பதுகாதலராகும் ௪
பெருஞ்சூட்டென்பதுசிவளிகையாகும் ௫
பெருமிதந்தானேயுள்ளக்களிப்பாம் ௬
பெருகுபூணேபேரணிகலமாம் ௭
பெருங்கிழமையென்பதுமுழுதுமுரிமையாம் ௮
பெங்கென்பதுவேகள்ளிலோர்பேதம் ௯
பெருமஞ்சிகரேநாவிதராகும் ௧௦
பெறுவதுகொள்வோர்கூத்தியராகும் ௧௧

பெம்முதலொருபேர்முற்றும்.

பெம்முதலிருபெயர்

பெண்ணையேபனையோராறிருபேர் ௧௨
பெட்டலேவேண்டல்விரும்பலிருபேர் ௧௩

பெம்முதலிருபேர்முற்றும்.

பெம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௪௦௪.

பேமுதற் பலபெயர்ச் சூத்திரம்.

பேமுதலொருபெயர்

பேரிகையேயோர்வாச்சியமாகும் ௧
பேடிகையேயுறையாமெனப்படுமே ௨
பேரையென்பதுநீரெனலாகும் ௩
பேழிதானேபுடவையாகும் ௪
பேழென்பதுவேபெருமையாகும் ௫
பேனந்தானேகடனுரையெனப்படும் ௬
பேடரென்பதுவேயலியராகும் ௭

பேமுதலொருபேர்முற்றும்.

பேமுதலிருபெயர்

பேயேயில்லையும்பேயுமிருபேர் ௮
பேட்பேவிருப்பும்பெருமையுமிருபெயர் ௯

பேணல்தானேமிகுத்தலும்விரும்பலும் ௧0

பேதியென்பதுபேதியுமிரதமும் ௧௧

பேடேயூரும்பேடியுமிருபேர் ௧௨

பேரேபெயரும்பெருமையுமிருபேர் ௧௩

பேமுதலிருபேர்முற்றும்.

பேமுதற் பலபெயர்ச் சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—௪௧௭.

பைம்முதற் பலபெயர்ச் சூத்திரம்.

பைம்முதலொருபெயர்

பைதிரந்தானேயுண்டாகும் ௧

பைதென்பதுவேபசுமையாகும் ௨

பைத்தலென்பதுமுனிதலாகும் ௩

பைம்மைதானேபச்சையாகும் ௪

பைத்தியமென்பதுநோயெனலாகும் ௫

பைஞ்ஞீலந்தான்மக்கட்பரப்பாம் ௬

பைம்முதலொருபேர்முற்றும்.

பைம்முதலிருபெயர்

பைங்கூழேபயிர்நோயெனவிருபேர் ௭

பையமென்பதுகூடையுங்கோரையும் ௮

பைதலேபுற்கென்றலுஞ்சிறுமையும் ௯

பைம்பொனென்பதுவேமேருகிரியுடன்
பசும்பொன்னெனவும்பகருமிருபேர் ௧0

பையுளேநோய்சிறுமையிருபேர் ௧௧

பைத்தலேயுருத்தலும்பசுத்தலுமிருபேர் ௧௨

பைம்முதலிருபேர்முற்றும்.

### பைம்முதலொருபெயர்

பையெயழகும்பசுமையும்பையும்
பாம்பின்படமுமெத்தெனவுமைம்பேர் — ௧௩

பைம்முதலொம்பேர்முற்றும்.

பைம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௪௩௦.

பொம்முதற் பலபெயர்ச் சூத்திரம்.

### பொம்முதலொருபெயர்

பொங்குதருனேயெழுதலாகும் ௧
பொங்கழியேதூற்றுநெற்பொலியாம் ௨
பொடித்தலென்பதுதோன்றுதலாகும் ௩
பொதிப்போதாவேபெருநாரையாகும் ௪
பொதுவிருனேயம்பலமாகும் ௫
*பொதியிலென்பதுதென்மலையாகும் ௬
பொதியப்பொருப்பனேபாண்டியனாகும் ௭
பொதுவர்தானேயிடையராகும் ௮
பொருதலென்பதுமுட்டலாகும் ௯
பொப்பளமேயொருதெய்வமாகும் ௧௦
பொழிப்பாடென்பதுபுகழெனப்படுமே ௧௧
பொருட்செல்வியென்பதுசிதேவியாகும் ௧௨
பொருநையேதண்பொருந்தமாகும் ௧௩
பொருநைத்துறைவனேசேரனாகும் ௧௪
பொருகளமேபகைப்புலமெனப்படுமே ௧௫
பொல்லமென்பதுதுன்னமாகும் ௧௬
பொறையனென்பதுசேரனாகும் ௧௭

* பொதியமென்பது பி-ம்.

பொன்கொல்லரென்பது தட்டாராகும் கஅ

பொன்னியேகாவேரியாகும் ககூ

பொம்முதலொருபேர்முற்றும்.

## பொம்முதலிருபெயர்

பொலிவேபொன்னும்பொலிவுமிருபேர் உ0

பொதுளலென்பதுசெறிதலுந்தழைத்தலும் உக

பொய்த்தலேவிளையாடலும்பொய்த்தலும் உஉ

பொதியேமூடைபொதியெனவிருபேர் உஙூ

பொத்தகமென்பதுசித்திரப்படாமுந்
திருமுறையெனவுஞ்செப்புமிருபேர் உச

பொக்கமேபொய்மிகுதியிருபேர் உரு

பொய்யேபொத்தும்பொக்கமுமிருபேர் உசு

பொச்சாப்பேபொல்லாங்குமறவியும் உஎ

பொற்றையேவரைதூறெனவிருபேர் உஅ

பொம்முதலிருபேர்முற்றும்.

## பொம்முதன்முப்பெயர்

பொங்கரென்பதுசோலையுமிலைவுமு
மரக்கொம்புடனேமருவுமுப்பேர் உகூ

பொகுட்டென்பதுதாமரைப்பூங்கோட்டையுஞ்
சேற்றிற்குமிழியும்வெற்புமுப்பேர் ஙூ0

பொம்மலென்பதுபொருமலும்பொலிவுஞ்
சோறுமென்றேசொல்லுமுப்பேர் ஙூக

பொகிலென்பதுபுட்பொதுவுங்கொப்பூழும்
பூமொட்டெனவும்போற்றுமுப்பேர் ஙூஉ

பொற்பென்பதுவேபொலிவுமொப்பனையும்
வனப்புமென்றேமருவுமுப்பேர் ஙூஙூ

பொம்முதன்முப்பேர்முற்றும்.

பொம்முதனாற்பெயர்

பொழிலேபுவியும்பெருமையுஞ்சோலையு
முலகுமெனவேயோது நாற்பேர் ருச

பொம்முதனாற்பேர்முற்றும்.

பொம்முதலைம்பெயர்

பொருநரேகூத்தரும்போர்த்தலைவரும்
பாணரும்வீரருங்கொற்றவருமைம்பேர் ருரு

பொம்முதலைம்பேர்முற்றும்.

பொம்முதலேழ்பேர்

பொருளேதலைமையும்பொன்னும்பணியும்
பலபண்டமுஞ்சொற்பொருளும்பிள்ளையும்
வாய்மையுமெனவேமதிக்குமேழ்பெயர் ருசு

பொறையென்பதுவேமலையும்பொறையுந்
துறுகலும்பூமியும்பாரமுஞ்சுமத்தலுங்
கருப்பமுமெனவேகருதுமேழ்பேர் ருஎ

பொம்முதலேழ்பேர்முற்றும்.

பொம்முதலெண்பெயர்

பொன்னேமாழையும்பஞ்சலோகமும்
வனப்புமிரும்பும்பொலிவும்வியாழமு
மிரவியும்பூமகளெனவுமெண்பேர் ருஅ

பொம்முதலெண்பேர்முற்றும்.

பொம்முதற்பன்னிருபெயர்

பொறியென்பதுவேவரியும்புள்ளியும்
பொருளும்புத்தியுமெழுத்துஞ்செல்வமு
மிருவினையுஞ்செந்திருவுமைம்புலனு
மரக்கலமுமியந்திரமுமுடனே
யிலாஞ்சனமெனவும்பன்னிருபெயராம் ருகூ

பொம்முதற்பன்னிருபேர்முற்றும்.

பொம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—ருகூ.

போமுதற் பலபெயர்ச் சூத்திரம்

போமுதலிருபெயர்

போகியேயிந்திரன்பாம்பிருபெயர் க

போக்கையேயிளம்பனையுமியானையும் உ

போசரேகாவியும்வினைக்குடையவரும் ௩

போற்றலென்பது புகழ்தலுமோம்பலும் ச

போலேயசையும்போலுமிருபேர் ரு

போமுதலிருபேர்முற்றும்.

போமுதன்முப்பெயர்

போதகமேயிபக்கன்றும்பனையு
மிளமையுமெனவேயிசைக்குமுப்பேர் சு

போரென்பதுவேசதயமும்பொருதலு
நெற்போரெனவுமுப்பேர்கூறும் எ

போர்வையென்பதுதோலு*முட்டாக்கு
மீக்கோளெனவுமேவுமுப்பேர் அ

போமுதன்முப்பேர்முற்றும்.

போமுதனாற்பெயர்

போதமென்பதுவேயறிவுஞானமு
மரக்கலமுமிபக்கன்றுநாற்பேர் சு

போமுதனாற்பேர்முற்றும்.

போமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்,

ஆகச்சூத்திரம்—சஎஅ.

பௌமுதற் பலபெயர்ச் சூத்திரம்

பௌமுதலொருபெயர்

பௌத்தனென்பதுபுத்தன்பெயராம் க

பௌமுதலொருபேர்முற்றும்.

---

* மூடாக்கு என்பது பி-ம்.

பௌமுதன்முப்பெயர்

பௌவமென்பதுவேயுவருங்கடலுங்
*கண்ணுமெனவேகருதுமுப்பேர் உ

பௌமுதன்முப்பேர்முற்றும்.

பௌமுதற் பலபெயர்ச் சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—சஅ0.

திருமேற்றளிக்குச்செழுந்தமிழ்ப்புராணந்
தெரிதருசிதம்பரரேவணன்பகர்ந்த
வேழெனும்பகராதிப்பெயர்த்தொகுதி
தாழ்வரநானூற்றெண்பத்தைந்தே

ஏழாவதுபகராதிப்பெயர்த்தொகுதிமுற்றும்.

எட்டாவது

# மகராதிப்பெயர்த்தொகுதி.

விசுவமித்திரன்றனேவேதியனுக்குந்
திசைபுகழ்பட்டீச்சுரனருள்வணங்கி
மகராதிப்பெயர்த்தொகுதியைவகுப்பாம்.

மம்முதற் பலபெயர்ச் சூத்திரம்.

மம்முதலொருபெயர்

மகபதியென்பதுதேவேந்திரன்பெயர் க
மகமுறையென்பதுவிருந்தெனலாகும் உ
மகரகேதனனேகாமனெனப்படும் ங
மக்களென்பதுமானிடர்பெயரே ச
மஞறருனேபொலிவெனலாகும் ரு
மகாரென்பதுவேபிள்ளைகளாகும் சு
மஞ்சுவென்பதுவேகட்டிலாகும் எ

* கணுவுமென்பது பிசும்.

மஞ்சந்தானேகட்டிலெனப்படும் அ
மஞ்சிகையென்பதுபேழையெனப்படும் கூ
மடிந்தாரென்பதுபட்டாரெனலாம் க0
மடுத்தருளேயுபகாரப்பெயர் கக
மணங்கலென்பதுபானையாகும் கஉ
மண்டூகந்தான்றவளையாகும் கங
மண்ணீடென்பதுதிண்ணையாகும் கச
மண்ணலேபொற்புறுத்தலாகும் கரு
மழுவருளேயலங்கரித்திடலாம் கசு
மஞ்சுகமென்பது கொக்கின்பேரே கஎ
மதகுதானேநீரோடியின்பேர் கஅ
மதர்ப்பென்பதுவேயுள்ளக்களிப்பாம் ககூ
மத்தந்தானேசேலெனலாகும் உ0
மதங்கரென்பதுபாணராகும் உக
மலயந்தானேபொதியமாகும் உஉ
மதகயந்தானேயானையாகும் உங
மதாணியென்பதுபேரணிகலமே உச
மத்திகைதானேசம்மட்டியின்பேர் உரு
மந்தியேபெண்குரங்கெனலாகும் உசு
மந்தாகினியேகங்கையாகும் உஎ
மயூரமென்பதுமயிலெனப்படுமே உஅ
மருமந்தானேமார்பெனலாகும் உகூ
மருத்தென்பதுவேகாற்றெனலாகும் ங0
மஞ்சிலென்பதுமுதுவரம்பாகும் ஙக
மலாவகந்தானேபிண்ணாக்காகும் ஙஉ
மலரோனென்பதுபிரமனாகும் ஙங

* சாலெனலாகும் என்பது பி-ம்.

மலினந்தானேமாசெனலாகும் ௩௪
மலயக்காலேதென்றலாகும் ௩௫
மலைப்பென்பதுவேயோர்கூத்தாகும் ௩௬
மத்தியந்தானேநடுவெனலாகும் ௩௭
மல்லமென்பது தட்டெனலாகும் ௩௮
மழவுதானேயிளமையாகும் ௩௯
மற்கடமென்பது குரங்கெனலாகும் ௪0
மற்கோறானேபகையெனலாகும் ௪௧
மற்கென்பதுவேமுனிவெனலாகும் ௪௨
மன்பதையென்பது மக்கட்பரப்பாம் ௪௩
மன்மதன்றானேகாமனாகும் ௪௪
மருவலரென்பது சத்துருக்களாம் ௪௫
மறைபுகலென்பது சரண்புகலாகும் ௪௬

மம்முதலொருபேர்முற்றும்.

மம்முதலிருபெயர்

மச்சமேமீன்மச்சமிருபேர் ௪௭
மகரந்தமேபூந்தேனுங்கள்ளும் ௪௮
மட்டேயெல்லையுங்கள்ளுமிருபேர் ௪௯
மண்கணை தானேகுடமுழாவுடனே
முழவமெனவேயிருபெயர்சாற்றும் ௫0
மண்ணேடிளேயேகாமரமுஞ்
சந்திரமெனவுஞ்சாற்றுமிருபேர் ௫௧
மதுகரமென்பது கள்ளும்வண்டும் ௫௨
மந்தாரமென்பது செம்பரத்தமுந்
தருமரமெனவுஞ்சாற்றுமிருபேர் ௫௩
மயனேதேவதச்சனும்வினைஞரும் ௫௪
மயிலேயிருவாட்சியுமீனும் ௫௫
மராமரமேயாச்சாவுங்கடம்பும் ௫௬

மாளமேமாதளியுமுரசமும் ருள
மருமானென்பது மருகனுமகனும் ருஅ
மறுகேதெருவுமறுகுமிருபேர் ருகூ
மன்றலென்பதுவேகல்யாணமும்
பரிமளமெனவும்பகருமிருபேர் கூ0
மருவேமணமுமருவுமிருபேர் கூக
மகமேயாகமோர்நாளிருபேர் கூஉ
மடலென்பதுபனையேடுபோல்பவு
மலரிதழெனவுமருவுமிருபேர் கூங
மழையேமேகங்குளிர்ச்சியிருபேர் கூச
மடையேமணிப்பணிக்கடைப்பூட்டுடனுஞ்
சோறுமென்றேசொல்லுமிருபேர் கூரு
மத்தகமென்பதுநெற்றியுஞ்சென்னியும் கூகூ
மதனேகாமனும்வனப்புமிருபேர் கூஎ
மரபேமுறைமையுந்தொன்மையுமிருபேர் கூஅ
மறலேபிணக்குங்*கூத்துமிருபேர் கூகூ
மன்னனென்பதுவேயுத்திரட்டாதியு
மன்னனுமெனவேமருவுமிருபேர் எ0
மல்லலேவளம்வலியெனவிருபேர் எக
மற்றேவினைமாற்றசைநிலையிருபேர் எஉ
மறலியேமயக்கங்கூற்றெனவிருபேர் எங

மம்முதலிருபேர்முற்றும்.

மம்முதன்முப்பெயர்

மங்குலென்பதுவேமேகமுமிருளும்
விண்ணுமெனவேவிரிக்குமுப்பேரே எச
மஞ்சரியேபூங்கொத்துந்தளிரு
மாலையுமெனவேமதிக்குமுப்பேர் எரு

---

* கூற்றும் என்பது பி-ம்.

மடமேயறியாமையுமுனிவாசமுஞ்
சத்திரமெனவுஞ்சாற்றுமுப்பேர் எசு

மயிர்வினையென்பதுமயிர்குறைகருவியு
நாவிதனுங்கத்திரிகையுமுப்பேர் எஎ

மருந்தென்பதுவேயமுதமுமருந்தும்
புதற்புல்லெனவும்போற்றுமுப்பேரே எஅ

மதுவென்பதுவேவசந்தகாலமுந்
தேனுங்கள்ளுஞ்செப்புமுப்பேர் எகூ

மல்லென்பதுவோர்கூத்தின்வகுப்பும்
வளமும்வலியுஞ்செப்புமுப்பேர் அ0

மலர்தல்தானேயெதிர்தலுந்தோன்றலு
மலர்தலுமெனவேமருவுமுப்பெயரே அக

மன்றமென்பதுவேவெளியும்வாசமு
மம்பலமெனவுமாகுமுப்பேரே அஉ

மண்டிலமென்பதுநாடுங்குதிரையும்
வட்டமுமெனவேவைக்குமுப்பேர் அங

மயலென்பதுவேமயக்கமுஞ்செத்தையும்
பேயுமெனவேபேசுமுப்பேர் அச

மண்ணைதானேயிளமையும்பேயு
மறிவிலாருமாகுமுப்பெயரே அரு

மருளேமயலுங்குறிஞ்சியாழ்த்திறனும்
பேயுமெனவேபேசுமுப்பெயரே அசு

மாக்காலேயாயிலியநாளுஞ்
சோதிநாளுமாக்காலுமுப்பேர் அள

மலைத்தலென்பதுமறுத்தலும்பொருதலுஞ்
சூடலுமெனவேசொல்லுமுப்பேர் அஅ

மள்ளர்தானேயுழவருங்குறவரும்
வீரருமெனவேவிதிக்குமுப்பேரே அகூ

மருதமேமருதநிலத்திற்பாடலு
மருதநிலமும்வயலுமுப்பேர் கூ0

மரையேயோர்மிருகமுந்தாமரையுந்
தவளையுமெனவேசாற்றுமுப்பேர் ௯௧

மதமேயவாவர்சொல்லிடுமதமுஞ்
செருக்குமதமுஞ்செப்புமுப்பேர் ௯௨

மந்திரியேசுக்கிரனுங்குபேரனு
மந்திரியெனவும்வகுக்குமுப்பேரே ௯௩

மம்முதன்முப்பேர்முற்றும்.

மம்முதனாற்பெயர்

மகரமேயோரிராசியுங்காதலுஞ்
சுறவும்பூந்தாதுஞ்சொல்லுநாற்பெயர் ௯௪

மறையேகேடகமந்திரம்வேத
மிராசியமெனவேயிசைக்குநாற்பேர் ௯௫

மதுகமென்பதுவேயெட்டியுமிலுப்பையு
மதுரமுந்தராவும்வைக்குநாற்பேர் ௯௬

மன்னேவேந்தனுமசைச்சொலுமிகுதியு
நிலையுமெனவேநிகழ்த்துநாற்பேர் ௯௭

மதியேநிலவுமுன்னிலையசைச்சொலு
மாதமும்பேரறிவுடனுநாற்பேர் ௯௮

மண்டலிதானேயுரகமும்பூமியு
நாயும்பூனையுநாற்பேராகும் ௯௯

மதர்வேவலியுமிகுதியும்வனப்பு
மிடமுமெனவேயிசைக்குநாற்பேர் ௧00

மம்முதனாற்பேர்முற்றும்.

மம்முதலைம்பெயர்

மந்திரமேபரிக்கூட்டமும்விசாரமுங்
கோயிலுமில்லுமந்திரமுமைம்பேர் ௧0௧

மனவேமாடையுநீலமணியு
நன்மணியுடனேயக்குமணியுஞ்
சங்குமெனவேசாற்றுமைம்பேர் ௧0௨

மம்முதலைம்பேர்முற்றும்.

மம்முதலறுபெயர்

மணியென்பதுவேமுத்தும்வனப்புங்
கருமையுநன்மையுங்கடவுண்மணியு
நவமணியெனவுநாட்டுமறுபெயர் க0௩

மண்ணேயணுவுமுழவின்மார்ச்சனையு
மொப்பனையுங்கழுவுதலுமாட்சிமையும்
பூமியுமெனவேபோற்றுமறுபேர் க0௪

மறமென்பதுவேமலைந்தசேவகமுஞ்
சினமும்பிணக்குங்கூற்றுங்கொலையும்
வினைசெயலெனவுமேவுமறுபேர் க0௫

மம்முதலறுபேர்முற்றும்.

மம்முதலெழுபெயர்

மஞ்சென்பதுவேயானையின்முதுகும்
பூணும்வலியும்வனப்புமழையு
மிளமையுமுகடுமேழ்பெயராகும் க0௬

மதலைதானேகொன்றையும்பிள்ளையும்
வங்கமுங்கொடுங்கையும்பாவையுந்தூணு
மரக்கலமெனவுமருவுமேழ்பேரே க0௭

மடியெனலேயடங்குதலுந்தாழையுஞ்
சோம்பும்வயிறுந்தூசுநோயுஞ்
சோறுமெனவேசொல்லுமேழ்பேர் க0௮

மடங்கலேயுருமிடியுந்தாழையு
மூழித்தீயுஞ்சிங்கமுநோயு
மடங்கலுங்கூற்றுமருவுமேழ்பேரே க0௯

மம்முதலேழ்பேர்முற்றும்.

மம்முதற் பலபெயர்ச் சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—க0௯.

மாமுதற் பலபெயர்ச் சூத்திரம்.

மாமுதலொருபெயர்

மாசென்பதுவேகளங்கமாகும் க

மாசுணமென்பதுபெரும்பாம்பாகும் உ

மாண்பென்பதுவேமாட்சியாகும் ௩
மாதவிதானேகுருக்கத்தியாகும் ௪
மாமாத்திரரேமருத்துவராகும் ௫
மாயாபுரியேபித்தளையாகும் ௬
மால்பென்பதுவேகண்ணேணியாகும் ௭
மாலதிதானேமல்லிகையாகும் ௮
மாவிளந்தானேகூவிளமாகும் ௯
மாந்தியென்பது மாமரமாகும் ௧0
மாழாம்பலமேயனந்தலாகும் ௧௧
மானமாவென்பது கவரிமாவாம் ௧௨
மாளுதலென்பது துஞ்சலாகும் ௧௩
மான்றல்தானேமயக்கமாகும் ௧௪

மாமுதலொருபேர்முற்றும்.

மாமுதலிருபெயர்

மாந்திகுளிகன்மாமரமிருபேர் ௧௫
மாடமேமனையுழுந்திருபேரே ௧௬
மாடகமேமுறுக்காணியும்யாழும் ௧௭
மானியென்பது காதலுமகளிரும் ௧௮
மாயமேபொய்வஞ்சனையிருபேர் ௧௯
மாலியேகள்ளிரவியிருபேர் ௨0
மாவலியேயானிலையுமோரசுரனும் ௨௧
மானவரென்பதாண்மைப்பெயரு
மானவரெனவுமருவுமிருபேர் ௨௨
மாலமேபேய்குங்குமமிருபேர் ௨௩
மாய்வேமறைவுஞ்சாவுமிருபெயர் ௨௪
மாதவமென்பது தவமும்வசந்தமும் ௨௫
மானேமானுமுருவுமிருபெயர் ௨௬

மாமுதலிருபேர்முற்றும்.

மாமுதன்முப்பெயர்

மாருதிபனுமன்வீமன்மகளிர் ௨௭

மானமென்பதுமபக்கமுமொப்பு
மிலச்சையுமெனவேயிசைக்குமுப்பேர் ௨௮

மாலரென்பதுமெப்புதுகருவியும்
புலையரும்வேடரும்போற்றுமுப்பேர் ௨௯

மாமுதன்முப்பேர்முற்றும்.

மாமுதனாற்பெயர்

மாதங்கந்தானிளமையுமானையு
முருவமுங்கடலுமோதுநாற்பேர் ௩௦

மாசுதானேகுற்றங்கோழை
மழைபழுக்குடனேமருவுநாற்பேர் ௩௧

மாமுதனாற்பேர்முற்றும்.

மாமுதலைம்பெயர்

மாட்சிதானேதிருந்தலுமமைதியு
நீர்மையுமாண்புங்குற்றமுமைம்பேர் ௩௨

மாரிதானேமேகமும்வியாதியுங்
கள்ளும்விளிவுமோடையுமைம்பேர் ௩௩

மாதிரமென்பதுதிசையுமலையும்
வானுந்தும்பியுமண்டிலமுமைம்பேர் ௩௪

மாதரேயினிச்சொல்லுமாதருங்
காதலுமழகும்பொன்னுமைம்பேர் ௩௫

மார்க்கமேமுதலையுமுலமும்
வழியுஞ்சமயமும்வீதியுமைம்பேர் ௩௬

மாமுதலைம்பேர்முற்றும்.

மாமுதலறுபெயர்

மானமென்பதுசவாதும்பெருமையுங்
குற்றமுமளவுங்கத்தூரியுட
னிலச்சையுமெனவேயிசைக்குமறுபேர் ௩௭

மாடேபக்கமுஞ்செல்வமும்பொன்னு
நிரையுமணியுஞ்சீதனமுமாம் ௫௮

மாலைதானேயந்தியும்பிரவியும்
பூவால்மணியாற்பொன்னாற்சொல்லாற்
றொடுத்ததொடையுமொழுங்குமியல்பு
மாலிகையெனவுமருவுமறுபேர் ௫௯

மாமுதலறுபேர்முற்றும்.

மாமுதலெழுபெயர்

மாழைதானேயாயமுமடமையும்
பொன்னுமோலையுமுலோகக்கட்டியும்
புளிமாவுடனேயேருமேழ்பேர் ௬௰

மாமுதலேழ்பேர்முற்றும்.

மாமுதற்பதினொருபெயர்

மாலென்பதுவேமாயனுமயக்கமும்
புதனும்பெருமையுமேகமுங்காற்றும்
பழமையும்வேட்கையும்வெற்புங்கருமையுங்
கண்ணேணியுமெனப்பதினொருபெயரே ௬௧

மாமுதற்பதினொருபேர்முற்றும்.

மாமுதற்பதினைந்துபெயர்

மாவென்பதுவேயாணியும்பெருமையு
ம்ருகமும்வண்டுந்துகிலுஞ்செல்வமு
மொருமாவுடனேயமழுத்தலுங்கறுப்பும்
வெறுப்புங்குதிரையுநிறமுமென்மாவு
மொருமாமுங்கடலையும்பதினைம்பெயர் ௬௨

மாமுதற்பதினைம்பேர்முற்றும்.

மாமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம் — கறுக.

மிம்முதற்பலபெயர்ச்சூத்திரம்

மிம்முதலொருபெயர்

மிஞ்சிகையென்பதுகுண்டலமாகும் ௧
மிலேச்சர்தானேயாரியரெனப்படுப ௨

மிலைத்தலென்பது சூடுதலாகும் ௩
மிழற்றலேநிரம்பாமென்சொல்லாம் ௪

மிம்முதலொருபேர்முற்றும்.

மிம்முதலிருபெயர்

மிஞ்சேமிகுவதுவண்டுமிருபேர் ௫
மிதவையென்பதுதெப்பமுஞ்சோறும் ௬
மிச்சிலேயொழிபொருளுமெச்சிலும் ௭
மிளையேயரணுங்காவற்காடும் ௮
மிகையென்பதுவேவேதனைசெய்தலுந்
துக்கமுமெனவேசொல்லுமிருபேர் ௯
மிற்கேயிரையுமெத்தகவுமிருபேர் ௧௦

மிம்முதலிருபேர்முற்றும்.

மிம்முதன்முப்பெயர்

மிடனென்பதுவேமகனும்வலியுஞ்
சந்திரனெனவுஞ்சாற்றுமுப்பேர் ௧௧

மிம்முதன்முப்பேர்முற்றும்.

மிம்முதனாற்பெயர்

மிக்கவையேயூணடிசினிறைத
னியாயமல்லாதவையெனநாற்பேரே ௧௨

மிம்முதனாற்பேர்முற்றும்.

மிம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௧௯௩.

மீமுதற்பலபெயர்ச்சூத்திரம்

மீமுதலொருபெயர்

மீமிசையென்பதுமேலெனலாகும் ௧
மீக்கோளேமேற்போர்வையாகும் ௨
மீக்கூறலென்பதுமேம்பாடாகும் ௩

மீமுதலொருபேர்முற்றும்.

மீமுதலிருபெயர்

மீனேயுடுவுமச்சமுமிருபேர் ௪
மீமுதலிருபேர்முற்றும்.

மீமுதலறுபெயர்

மீளியேதிண்ணியனும்வலியும்
பெருமையுங்கூற்றும்பாலைத்தலைவனு
மேன்மகனெனவும்விரிக்குமறுபெயர் ௫
மீமுதலறுபேர்முற்றும்.

மீமுதற் பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—கசஅ.

மும்முதற்பலபெயர்ச்சூத்திரம்

மும்முதலொருபெயர்

முகமனேயுபசாரமாகும் க
முகடியேமூதேவியாகும் உ
முகிழென்பதுவேபூமொட்டாகும் ௩
முசலந்தானேயிருப்புலக்கைப்பெயர் ௪
முகையென்பதுவேபூமொட்டாகும் ௫
முகுந்தனென்பதுமாயனாகும் ௬
முசலிகைதானேயுடும்பெனலாகும் ௭
முசுண்டியென்பதுபடைக்கலமெனப்படும் ௮
முச்சியென்பதுமயிர்முடியாகும் ௯
முஞ்சலென்பதுமொய்த்தலாகும் க௦
முடங்குளைதானேசிங்கமெனப்படும் கக
முராரியென்பதுதிருமாலாகும் கஉ
முடுக்கரென்பதுமலையின்முழையாம் க௩
முதுவர்தானேமூத்தோராகும் க௪
முதுமகனென்பதுசனியனாகும் க௫

முதையருனேமுது காடாகும் கசு
முதைப்புனமேபழங்கொல்லையாகும் கள
முந்தூழெண்பதுமூங்கிலாகும் கஅ
முத்தலையெண்பதுசூலமாகும் கசு
முதையேவெட்டுக்காடெனப்படுமே உ0
முக்குடுமியென்பதுசூலமெனப்படும் உக
முரற்றுமந்தானேகுடமெனப்படுமே உஉ
முயக்கமேயாலிங்கனமாகும் உந
முருக்குதலெண்பதுகோறலாகும் உச
முருகியமெண்பதுகுறிஞ்சிப்பறையாம் உரு
முழுமகனேயறிவில்லானெனப்படும் உசு
முழவுதானேவாச்சியமெனப்படும் உள
முழவலையந்தான்வென்றியாகும் உஅ
முறுவலெண்பதுநகுதலாகும் உசு
முனையரிடமேபாலைநிலமாகும் ந0
முனைவரென்பதுதுறந்தோர்பேரே நக
முந்நீரென்பதுகடலெனப்படுமே நஉ
முன்றிருனேமுற்றமாகும் நந
முச்சியரேயுறைகாரராகும் நச
முப்புரமென்பதுதிரிபுரமாகும் நரு
முப்புரிநூலோர்வேதியராகும் நசு

மும்முதலொருபேர்முற்றும்

மும்முதலிருபெயர்

முகமேயிடமுமுகமுமிருபேர் நள
முடுவல்பெண்ணும்செந்நாயாகும் நஅ
முரசமேவாச்சியமுமுரசும் நசு

முந்தென்பதுவேவெண்குருகுடனே
முந்துமெனவேமொழியுமிருபேர் ௪௦

முருந்தேமயிறகினடியிற்குருத்துந்
தவளமுமெனவேசாற்றுமிருபேர் ௪௧

முன்னமேசிக்கிரியுமெண்ணமும் ௪௨

முன்னேயேமுன்றோன்றலுமுன்னையும் ௪௩

முசலிதானேதாழையுமோந்தியும் ௪௪

முன்னலென்பதுநினைவுநெஞ்சமும் ௪௫

முன்பேவலியுமுன்புமிருபேர் ௪௬

முரணேவலியும்பகையுமிருபேர் ௪௭

முற்றேமுழுவதும்விளைவதுமிருபேர் ௪௮

மும்முதலிருபேர்முற்றும்.

## மும்முதன்முப்பெயர்

முடங்கலென்பதுமடங்கலுந்தாழையு
மூங்கிலுமெனவேமொழியுமுப்பேர் ௪௯

முடவனென்பதுவேயருணனுஞ்சனியு
முடவனுமெனவேமொழியுமுப்பேர் ௫௦

முரசேயுத்திரட்டாதியும்பறையும்
பேரிகையெனவும்பேசுமுப்பேரே ௫௧

முளையென்பதுவேபிள்ளையுமூங்கிலு
மங்குரமெனவுமாகுமுப்பேரே ௫௨

முறியென்பதுவேயிலையுந்தளிரு
முறியுமென்றேமுப்பெயர்கூறும் ௫௩

முரம்பேபரலடுத்துயர்ந்தநிலமு
மேடும்பாறையுமேவுமுப்பேரே ௫௪

முதலேமூலியுங்கையினின்முதலு
முதலுமென்றேமொழியுமுப்பேரே ௫௫

மும்முதன்முப்பேர்முற்றும்

### மும்முதனூற்பெயர்

முனியேயிருடியும்யானையின்கன்றும்
வில்லுமகத்தியுமேவுநாற்பேரே ருசு

முத்தந்தானேயுதடும்பிரியமு
முத்துமருதநிலமுநாற்பேர் ருஎ

முடையேநாற்றங்கோணிகைபேடகம்
பொதியனெனவும்புகலுநாற்பேர் ருஅ

முறையேயூழுமுறையுங்குணமும்
புத்தகமெனவும்புகலுநாற்பேர் ருகூ

முனையேயிறைமையும்பகையும்வெறுப்பு
முனையுமெனவேமொழியுநாற்பேர் சுo

மும்முதனூற்பேர்முற்றும்

### மும்முதலைம்பெயர்

முல்லையென்பதுவேமோடுடுவென்றியு
முல்லைநிலமுங்கானமல்லிகையுங்
கற்புடைமையுடனிசையுமைம்பேர் சுக

முற்றலேசூழ்போதலும்வெறுத்தலு
முடிவுமுதுமையும்வளைத்தலுமைம்பேர் சுஉ

மும்முதலைம்பேர்முற்றும்.

### மும்முதலறுபெயர்

முளரியேதாமரையும்விறகுங்
காடுஞ்சிறுமையுஞ்செந்தீயுடனு
முண்மரமெனவுமொழியுமறுபெயர் சுஙு

மும்முதலறுபேர்முற்றும்.

### மும்முதலெழுபெயர்

முடலைதானேயுண்டையுந்திரட்சியு
முருடுங்கழலையும்பெருங்குறடுடனே
பெருமையுமுடனாற்றமுமெனவேழ்பெயர் சுச

மும்முதலேழ்பேர்முற்றும்.

மும்முதலெண்பெயர்

முண்டகமென்பது தாமரையுங்கள்ளுங்
கடலுநெற்றியுமம்போருகமு
முண்மூலமுநீர்முள்ளியுடனு
முத்தகமெனவுமொழியுமெண்பேர் சு௫

மும்முதலெண்பேர்முற்றும்.

மும்முதற்பத்துப்பெயர்

முருகென்பதுவேயிளமையுநாற்றமுங்
குகனும்விழாவும்வனப்புமகிலு
மெழுச்சியுநாரையும்வெறியாட்டாளனு
மெலுமிச்சைனவுமொருபதுபெயரே சுசு

மும்முதற்பத்துப்பேர்முற்றும்.

மும்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—உ௩௪.

மூமுதற்பலபெயர்ச்சூத்திரம்

மூமுதலொருபெயர்

மூடனேயறிவில்லோன்பெயரே க
மூதணங்கென்பதுகாடுகொளாகும் உ
மூதையேவெட்டிச்சுடுங்காடு ௩
மூதலென்பதுமூடுதலாகும் ச

மூமுதலொருபேர்முற்றும்.

மூமுதலிருபெயர்

மூசலேமொய்த்திடல்சாவிருபேர் ௫

மூமுதலிருபேர்முற்றும்.

மூமுதனாற்பெயர்

மூரலென்பதுவேயெயிறுஞ்சோறு
நகையுஞ்சொல்லுநாட்டுநாற்பேரே சு

மூமுதனாற்பேர்முற்றும்.

மூமுதலறுபெயர்

மூலந்தானேயேதுவுங்கிழங்கும்
வேருமுதலுமோர்நாளுட னு
மோர்நோயெனவுமோதுமறுபெயர் எ

மூரியென்பதுவேயாற்றலும்பெருமையு
மெருமையுடனேயேறுநெரிவுந்
தொன்மையுமெனவேசொல்லுமறுபெயர் அ

மூமுதலறுபேர்முற்றும்.

மூமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்--உசஉ.

மெம்முதற் பலபெயர்ச் சூத்திரம்

மெம்முதலொருபெயர்

மெல்லம்புலம்பனேநெய்தற்றலைமகன் க

மெம்முதலொருபேர்முற்றும்.

மெம்முதலிருபெயர்

மெத்தையேசட்டைமெல்லணையிருபேர் உ

மெம்முதலிருபேர்முற்றும்.

மெம்முதனாற்பெயர்

மெய்யேயுடலுமுண்மையுமொற்றுஞ்
சொற்பொருளெனவுஞ்சொல்லுநாற்பேர் ௩

மெம்முதனாற்பேர்முற்றும்.

மெம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உசரு.

மேமுதற் பலபெயர்ச் சூத்திரம்

மேமுதலொருபெயர்

மேதினியென்பதுபூமியாகும் க
மேதிதானேயெருமையாகும் உ
மேற்கோளேசனியாகுமென்ப ௩

மேகமென்பது முகிலெனப்படுமே ௪
மேவலர் தானேயொன்னாராகும் ௫
மேலுலகந் தான்விண் ணுலகெனப்படும் ௬
மேலோரென்பது வேதியராகும் ௭

மேமுதலொருபேர்முற்றும்.

மேமுதலிருபெயர்

மேகலை தானேயரைப்பட்டிகையுந்
தூசுமெனவேசொல்லுமிருபேர் ௮
மேழகமென்பது கவசமுந்தகரும் ௯
மேழையென்பது கஞ்சியுங்காடியும் ௧௦
மேக்கேமேற்குமேலுமிருபேர் ௧௧

மேமுதலிருபேர்முற்றும்.

மேமுதலறுபெயர்

மேதையேபோ திவுந்தோலும்
புதனுமிறைச்சியுமேற்றப்பாடு
மேம்பாடெனவும்விதிக்குமறுபேர் ௧௨

மேமுதலறுபேர்முற்றும்.

மேமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உ௫௭.

மைம்முதற் பலபெயர்ச் சூத்திரம்

மைம்முதலொருபெயர்

மைந்து தானேவலியெனலாகும் ௧
மைம்மையேமலடாமெனவிசைப்பர் ௨
மைப்புயலெனலேயிருண்டமேகமாம் ௩

மைம்முதலொருபேர்முற்றும்.

மைம்முதலேழ்பெயர்

மையெனலேயஞ்சனமுங்குற்றமு
மேகமுமலடுங்கறுப்புமிளமையுந்
தகருமெனவேசாற்றுமேழ்பேர் ௪

மைம்முதலேழ்பேர்முற்றும்.

மைம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உ௬௧.

மொம்முதற் பலபெயர்ச் சூத்திரம்.

மொம்முதலொருபெயர்

மொத்தமென்பது பொதுவெனலாகும் க
மொக்குளேநீர்க்குமிழியாகும் உ
மொள்ளலென்பது முகத்தலெனப்படும் ௩

மொம்முதலொருபேர்முற்றும்.

மொம்முதலிருபெயர்

மொய்ம்பேதோளும்வலியுமிருபேர் ச

மொம்முதலிருபேர்முற்றும்.

மொம்முதன்முப்பெயர்

மொய்த்தலென்பது கொடுத்தலுமிருத்தலு
மூடுதலெனவுமொழியுமுப்பேர் ரு

மொம்முதன்முப்பேர்முற்றும்.

மொம்முதலைம்பெயர்

மொய்யென்பதுவேயானையும்வண்டுந்
திரளுந்தாயுஞ்செருக்களமுமைம்பேர் சு

மொம்முதலைம்பேர்முற்றும்.

மொம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உகூஎ.

மோமுதற் பலபெயர்ச் சூத்திரம்.

மோமுதலொருபெயர்

மோகமென்பதுவேவிரகமாகும் க
மோடிதானேகாடுகோளாகும் உ
மோதகமென்பது கொழுக்கட்டைப்பேர் ௩
மோனமேபேசாமையாகும் ச

மோமுதலொருபேர்முற்றும்.

மோமுதன்முப்பெயர்

மோடென்பதுவேவயிறும்போழ்தலும்
மேடுமெனவேவிரித்திடுமுப்பேர் ரு

மோமுதன் முப்பேர்முற்றும்.

மோமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உகூஉ.

மௌமுதற் பலபெயர்ச் சூத்திரம்.

மௌமுதலொருபெயர்

மௌவைதானே தாயெனலாகும் க

மௌனியரென்பது துறந்தோர்பேரே உ

மௌமுதலொருபேர்முற்றும்.

மௌமுதனாற்பெயர்

மௌலியேகோடீரமுஞ்சடையுந்
தாருந்தலைமுடியுஞ்சாற்றுநாற்பேர் ங

மௌமுதனாற்பேர்முற்றும்.

மௌமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—உஎரு.

கலையாவையுமுணர்காவிபத்தொடையான்
புலியூர்ச்சிதம்பரரேவணசித்தன்
பரவியமகராதித்தொகுதியெட்டாவதி
லிருநூற்றெழுபத்தெண்சூத்திரமே.

எட்டாவது

மகராதிப்பெயர்த்தொகுதி முற்றும்.

ஒன்பதாவது

# யகராதிப்பெயர்த்தொகுதி.

மதவலிகிதமிதழுடன்மகிழ்ந்த
தேனுதாண்டவன்றிருவடியேத்தி
யகராதிப்பெயர்த்தொகுதியிசைப்பாம்

யம்முதற் பலபெயர்ச் சூத்திரம்

யம்முதலொருபெயர்

யசனமென்பதுவேவேள்வியாகும் க

யட்டிதானேபடைக்கலமாகும் உ

யம்முதலொருபேர்முற்றும்

யம்முதலிருபெயர்

யவனரென்பதுசித்திரகாரருஞ்
சோனகரெனவுஞ்சொல்லுமிருபேர் ௩

யம்முதலிருபேர்முற்றும்.

யம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௩.

யாமுதற் பலபெயர்ச் சூத்திரம்

யாமுதலொருபெயர்

யாகமென்பதுவேவேள்வியாகும் க
யாங்கென்பதுவேயெங்கெனலாகும் ௨
யாங்கர்தானேயிராக்கதராகும் ௩
யாதுதானவரேயிராக்கதர்பேராம் ௪
யாதென்பதுவேயையுறவாகும் ௫
யாமளையேமாகாளியாகும் ௬
யாயென்பதுவேதாயாராகும் ௭
யானமேவியாபரித்தலாகும் ௮
யாவையுமென்பதெல்லாமெனலாம் ௯

யாமுதலொருபேர்முற்றும்.

யாமுதலிருபெயர்

யாப்பேமுடிச்சும்பாம்புமிருபேர் க0
யாண்டேவருடமெங்கெனவிருபேர் கக
யாலமென்பதுவேயாச்சாமரமு
மிரவுமெனவேயிருபேராகும் க௨
யாளியேயிபஞ்சிங்கமிருபேர் க௩

யாமுதலிருபேர்முற்றும்.

யாமுதன்முப்பெயர்

யாழென்பதுவேவீணையுமிதுனமு
மசுபதிநாளுமாகுமுப்பேர் க௪

யாணரென்பதுவேபுதுமையுந்தச்சரும்
வனப்புமென்றேமருவுமுப்பேர் ௧௫

யாமுதன்முப்பேர்முற்றும்.

யாமுதனாற்பெயர்

யாமமென்பதுவேயிரவுஞ்சாமமும்
பொழுதுந்தெற்கும்போற்றுநாற்பேர் ௧௬

யாமுதனாற்பேர்முற்றும்.

யாமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௧௯.

யும்முதலொருபெயர்

யுவதிதானேபெண்ணெனலாகும் ௧

யும்முதலொருபேர்முற்றும்.

ஆகச்சூத்திரம்—௨௦.

யூமுதற் பலபெயர்ச் சூத்திரம்

யூமுதன்முப்பெயர்

யூபமேபடைவகுப்புங்கவந்தமும்
வேள்வித்தம்பமுமேவுமுப்பேர் ௧

யூமுதன்முப்பேர்முற்றும்.

யூமுதலைம்பெயர்

யூகமேயுடற்குறையுமோர்புல்லு
மோர்ந்திடுதர்க்கமுங்கரியகுரங்கும்
பெண்குரங்குடனேபேசுமைம்பேர் ௨

யூமுதலைம்பேர்முற்றும்.

யூமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௨௨.

யோமுதற் பலபெயர்ச் சூத்திரம்

யோமுதலொருபெயர்

யோகினியேமாகாளியாகும் ௧

யோமுதலொருபேர்முற்றும்.

யோமுதலொன்பெயர்

யோகமென்பதுவேயுயர்ச்சியுமுபாயமுந்
தியானமுங்கூட்டமுங்கூடலுமைம்பேர் ௨

யோமுதலொன்பேர்முற்றும்.

யோமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௨௪.

யௌமுதலொருபெயர்

யௌவனந்தானழகெனலாகும் ௧

யௌமுதலொருபேர்முற்றும்.

ஆகச்சூத்திரம்—௨௫.

பவமறத்தெளிந்தசிவதெரிசனத்தோன்
புவிமகிழ்சிதம்பரரேவணசித்த
னேத்தியயகராதித்தொகுதியொன்பானிற்
சூத்திரமுப்பத்தொன்றெனச்சொல்லுமே

ஒன்பதாவது

யகராதிப்பெயர்த்தொகுதி முற்றும்.

பத்தாவது

# வகராதிப்பெயர்த்தொகுதி.



சதுத்ததிமிளன்றனைச்சார்பிரமகத்தி
யிதத்துடன்கற்றுபட்டீசரைப்பரவியே
வகராதிப்பெயர்த்தொகுதியைவகுப்பாம்

வம்முதற்பலபெயர்ச்சூத்திரம்

வம்முதலொருபெயர்

வகிர்தலென்பதுவகுத்தலாகும் ௧
வகுமைதானேமகிழ்வாகும்மே ௨
வகுந்தென்பதுவழியெனலாகும் ௩
வட்டைதானேவழியெனப்படுமே ௪

வக்கிரன்றானேசெவ்வாயாகும் ரு
வகுப்பென்பதுவேகட்டழகாகும் சு
வங்கூழென்பதுகாற்றெனலாகும் எ
வருடல்தானேதடவலாகும் அ
வசையென்பதுவேகுற்றமாகும் கூ
வசையந்தானேமானேற்றின்பெயர் க0
வஞ்சினமேசூளறவெனப்படுமே கக
வட்புலியென்பதுசிங்கமாகும் க௨
வணரென்பதுவேவளைவெனலாகும் கங
வண்டானந்தான்குருகினமாகும் கச
வத்தமென்பதுசோறெனலாகும் கரு
வந்தனைதானேதொழுதலாகும் கசு
வம்பலென்பதுதிசையெனலாகும் கஎ
வயவரிதானேபுலியெனலாகும் கஅ
வலியானேயொருகுருவியாகும் ககூ
வயினதேயனேகருடனாகும் ௨0
வயிரென்பதுவேகருங்கொம்பாகும் ௨க
வயிரியரென்பதுகூத்தராகும் ௨௨
வரிக்கடைதானேவண்டெனலாகும் ௨ங
வரியாடலென்றலெழுதலாகும் ௨ச
வருதினியென்பதுபடையெனலாகும் ௨ரு
வலித்தல்தானேநினைத்தலாகும் ௨சு
வயிரோசனனேமாவலியாகும் ௨எ
வல்லிசைதானேபாம்பெனலாகும் ௨அ
வல்லமென்பதுவேயில்லாளாகும் ௨கூ
வல்லுநரென்பதுவல்லாராகும் ங0
வல்லார்தானேமாட்டாதாராம் ஙக

வழிஞ்சி தானேயிளமையாகும் ௩௨
வழிநாளென்பது பிற்றைநாளாம் ௩௩
வழியடைக்கல்லேபுறம்புறுத்தலாகும் ௩௪
வழிபயத்தலென்பது மறுப்பறுத்தலாகும் ௩௫
வடமுகிலென்பது பாண்டியனாகும் ௩௬
வழுதுணையென்பது வழுதலையாகும் ௩௭
வமைச்சென்பது வேயிளமையாகும் ௩௮
வழையென்பது வேசுரபுன்னையாகும் ௩௯
வழாதென்றலேபேசாதெனலாம் ௪0
வளாகமென்பது வேயிடமெனப்படுமே ௪௧
வளவனென்பது சோழனாகும் ௪௨
வள்ளுத்தானேவாளுறையாகும் ௪௩
வளையந்தானேவட்டமாகும் ௪௪
வளையகமென்பது சங்கெனலாகும் ௪௫
வற்காலிதானேவெள்ளாடாகும் ௪௬
வற்கலையென்பது மரவுரியாகும் ௪௭
வள்ளியோரேவரையாது கொடுப்போர் ௪௮
வள்ளியர்தானேபுகழ்வோராகும் ௪௯
வனப்பென்பது வேயழகெனப்படுமே ௫0
வள்ளியமென்பது மரக்கலப்பேர் ௫௧
வன்சிறைதானேமதிலெனப்படுமே ௫௨

வம்முதலொருபேர்முற்றும்.

வம்முதலிருபெயர்

வஞ்சமேபொய்வாளெனவிருபேர் ௫௩
வண்கையேசந்தனமுஞ்சாந்தும் ௫௪
வட்டணைதானேயறுத்தலுமொத்தலும் ௫௫
வண்டலேவிளையாட்டும்வண்டலும் ௫௬

வழுதலேதானேபுனத்திடுபொய்க்கழு
வழுதுணையெனவேவழங்குமிருபெயர் ருஎ

வம்பலரேபுதியோரயலோராம் ருஅ

வலவன்றனேவெற்றியாளனுந்
தேரிற்பாகனுஞ்செப்புமிருபேர் ருகூ

வல்சியேகூழுணவோடிருபெயர் கூ0

வல்வியமேபுலிகொடியெனவிருபேர் கூக

வழித்தோன்றலென்பது மகனுமகளும் கூஉ

வழிபாடென்பது பூசனையுடனே
வழிபாடெனவேமதிக்குமிருபேர் கூரு

வள்ளந்தானேயளவையும்வட்டிலும் கூச

வயிறேகயிறும்வயிறுமிருபேர் கூரு

வல்லிகைதானேகாதிலணியும்
யாழுமெனவேயறையுமிருபேர் கூகூ

வள்ளியந்தானேயூதிடுங்குழலு
மிளகுமெனவேவிரிக்குமிருபேர் கூஎ

வயலேவெளியும்பழனமுமிருபேர் கூஅ

வட்கலேநாண்கேடெனவிருபேர் கூகூ

வருடமேமழையாண்டெனவிருபேர் எ0

வலவைதானேவஞ்சப்பெண்ணும்
வல்லோனெனவுமருவுமிருபேர் எக

வடுகென்பதுவேமருதயாழ்த்திறனு
மிந்தளமெனவுமிசைக்குமிருபேர் எஉ

வருணமேநீர்குலமிருபேராம் எரு

வறிதேயருகலுஞ்சிறிதுமிருபெயர் எச

வரிதல்தானேயெழுதலும்வரிதலும் எரு

வள்ளைதானேயோர்பாட்டுடனே
வள்ளையுமெனவேமருவுமிருபேர் எகூ

வம்முதலிருபேர்முற்றும்.

வம்முதன்முப்பெயர்

வரைதலென்பது கொள்ளலுநீக்கலு
மெழுதலுமெனவேயிசைக்குமுப்பேர் எஎ

வளமையேமாட்சிமையுங்கொழுப்பு
முபகாரமுமெனவோதுமுப்பெயரே எஅ

வல்லையென்பது வலியுங்காடும்
விரைவுமெனவேவிளம்புமுப்பேர் எகூ

வடமென்பதுவேயாலுநாணியும்
வட்டமுமெனவேமதிக்குமுப்பேர் அ0

வழங்கலேயுலாவுதலுஞ்சொல்லுங்
கொடையுமெனவேகூறுமுப்பேர் அக

வந்திகையேநுதலணியுஞ்சுணங்கும்
பூணுமெனவேபுகலுமுப்பேர் அஉ

வச்சிரமென்பது வயிரமுங்குலிசமுஞ்
சதுரக்கள்ளியுஞ்சாற்றுமுப்பேர் அங

வயவனேவல்லாளனும்வலியனுங்
காதலனெனவுங்கருதுமுப்பேர் அச

வயந்தனேயோர்வானரங்காமன்
றென்றலுடனேசெப்புமுப்பேர் அரு

வலம்புரியென்பது நந்தியாவட்டமும்
வலம்புரியுடனுஞ்சங்குமுப்பேர் அசு

வயாவென்பதுவேகாதற்பெருக்கமுங்
கருப்பமுநோயுங்காட்டுமுப்பேர் அஎ

வயினென்பதுவேயிடமுமனையும்
வயிறுமெனவேமதிக்குமுப்பேர் அஅ

வரம்பென்பதுவேவட்டியுமணையும்
வரம்புமெனவேமருவுமுப்பேர் அகூ

வடகமென்பதுவேயத்தவாளமும்
வடகமுந்தோலும்வழங்குமுப்பேர் கூ0

வடவையென்பதுகோளிகைக்குதிரையும்
பிடியானையுங்கடையனலுமுப்பேர் கூக

வழியென்பதுவேயிடமுநடவையும்
பின்னுமெனவேபேசுமுப்பேர் கூஉ

வடிவமென்பதுமேனியுநிறமு
மெய்ச்சொல்லெனவும்விரிக்குமுப்பெயரே கூ௩

வம்முதன்முப்பேர்முற்றும்.

## வம்முதனாற்பெயர்

வடுவேசெம்பும்வண்டுந்தழும்புங்
கூர்மையுமெனவேகூறுநாற்பேர் கூச

வட்டியென்பதுபுட்டிலும்வழியுங்
கூடையும்வட்டிலுங்கூறுநாற்பேர் கூரு

வதுவையேகல்யாணமுநாற்றமும்
புணர்வும்வாசமும்போற்றுநாற்பெயரே கூசா

வம்பேபுதுமையுங்கச்சும்மணமு
நிலையின்மையுமெனநிகழ்த்துநாற்பெயரே கூஎ

வல்லியேயாய்ப்பாடியும்வள்ளியும்
வரைவும்நிகளமுமருவுநாற்பேர் கூஅ

வல்லேசூதும்வலியும்விரைவுங்
கச்சுமெனவேகருதுநாற்பெயரே கூகூ

வள்ளியேகைவளையுங்கூத்தும்
வல்லியும்புனையிழையுடனுநாற்பேர் க00

வளமென்பதுவேபண்டமும்வனப்பும்
பலவகையும்வளப்பாடுநாற்பேர் க0க

வக்கிரமென்பதுமடங்கலுங்கொடுமையும்
போக்கும்வட்டமும்புகலுநாற்பேர் க0உ

வன்னியேயோர்மரமுங்கிளியும்
பிரமசாரியுந்தீயுநாற்பெயர் க0௩

வசுவே தவரும்பொன் னுந்தீயுங்
கோதனமெனவுங்கூறுநாற்பேர் ௧0௪

வம்முதனாற்பேர்முற்றும்.

வம்முதலைம்பெயர்

வரையேமட்டும்வரையுமூங்கிலுங்
கையினில்வரையும்நீர்க்கரையுமைம்பேர் ௧0௫

வங்கமென்பதுவேவழுதலையீயம்
வெள்ளிநாவாய்கருத்தெனவைந்தே ௧0௬

வண்ணந்தானேயொப்பனைசெயலு
மழகுஞ்சந்தமுங்கவியினோசையும்
பண்புமெனவேபகருமைம்பேர் ௧0௭

வண்டேசங்குங்குற்றமும்வளையும்
வண்டும்வாளியுமைம்பேராகும் ௧0௮

வஞ்சியேமேற்செலவுமோர்*பாவும்
வல்லியும்பெண்ணுங்கருவூருமைம்பேர் ௧௧௬

வலமேயிடமும்வெற்றியுங்கனமும்
வலமுமேனுமருவுமைம்பெயரே ௧௧0

வண்மையென்பதுவாய்மையுங்கொடையும்
வளியும்புகழும்வளனுமைம்பேர் ௧௧௧

வம்முதலைம்பேர்முற்றும்.

வம்முதலறுபெயர்

வயமேயாடுங்குதிரையுமிரும்பும்
வலியும்புட்பொதுநீருமறுபெயர் ௧௧௨

வயிரமேமணிவச்சிரங்கூர்மை
செற்றஞ்சேகுவன்மையறுபெயர் ௧௧௩

வம்முதலறுபேர்முற்றும்.

வம்முதலெழுபெயர்

வட்டமேயூர்கோளும்பரிசையும்
வலயமும்தூசுநீர்ச்சாலுந்தாழ்வுங்
கைம்மணியெனவுங்கருதுமேழ்பேர் ௧௧௪

---

* மாமும் என்பது பி-ம்.

வள்ளென்பதுவேகாதுங்கூர்மையும்
வலியும்வாளும்வாருஞ்செறிவும்
வளமுமெனவேவழங்குமேழ்பேர் ககரு

வசியென்பதுவேபோழ்ந்துவடுப்படுதலுங்
கூர்மையும்வசியமும்வாளுந்திரட்சியும்
வருட்டலுங்குற்றமுமேழ்பெயராகும் ககசு

வம்முதலேழ்பேர்முற்றும்.

வம்முதலெண்பெயர்

வனமேநீருஞ்சோலையுமீமமூந்
துழாயுநாடுங்காடும்வனப்பும்
புற்றுமெனவேபுகலுமெண்பேர் ககஎ

வம்முதலெண்பேர்முற்றும்.

வம்முதற்பத்துப்பெயர்

வரியேசுணங்குமெழுத்துமொழுக்கும்
பாட்டுநீளமுமிறையுநெல்லும்
வடிவுந்தீயுங்கடலுமீரைம்பெயர் ககஅ

வம்முதற்பத்துப்பேர்முற்றும்.

வம்முதற்பலபெயர்ச்சூத்திரமுற்றும்.

ஆகச்சூத்திரம்—ககஅ.

வாமுதற்பலபெயர்ச்சூத்திரம்

வாமுதலொருபெயர்

வாசவனென்பதுதேவேந்திரன்பெயர் க
வாணிகர்தானேசெட்டிகளாகும் உ
வாடாவள்ளியென்பதுசித்திரம் ௩
வாயிலோரேதமிழ்க்கூத்தாடிகள் ச
வாய்மையென்பதுமெய்ம்மையாகும் ரு
வாய்த்தருனேபெறுதலாகும் சு
வார்ப்பென்பதுவேவளையெனலாகும் எ

வாரகந்தான்கடலெனப்படுமே அ

வாப்புதலென்பது நற்கோலாகும் கூ

வார்தருனேயொழுகலாகும் க0

வார்த்தைத்தொழிலோரேவேளாளர் கக

வாலதிதானேவாலுறுப்பாகும் கஉ

வாலிதென்பது வலியெனலாகும் கங

வாலுவர்தானேமடையராகும் கச

வாலுகமென்பது வெண்மணலாகும் கரு

வானவரம்பனேசேரனாகும் கசு

வாலுங்கியென்பது கக்கரியாகும் கஎ

வானேறேயிடியேயெனப்படும் கஅ

வாலாமையென்பது சூதகமாகும் கசு

வாமுதலொருபேர்முற்றும்.

வாமுதலிருபெயர்

வாதுவர்தானேயானைப்பாகர்
பரிமாவடிப்போரெனவிருபெயரே உ0

வானவனென்பது பிரமனுஞ்சேரனும் உக

வாடையென்பது வடகாற்றுடனே
வீதியுமெனவேவிளங்குமிருபெயர் உஉ

வாருணமேகடல்மேற்கெனவிருபேர் உங

வாழியேயிடைச்சொல்வாழ்கெனலாகும் உச

வாமனமென்பது திக்கயத்தொன்றுங்
குறளுமெனவுங்கூறுமிருபேர் உரு

வாகேயழகுக்தோளுமிருபேர் உசு

வாமுதலிருபேர்முற்றும்.

வாமுதன்முப்பெயர்

வாங்கலுனேயழைத்தலுங்கொள்ளலும்
வளைத்தலுமெனவேவழங்குமுப்பேர் உஎ

வாணியேயோர்கூத்தும்வாக்கு
நாமகளென்வுநாட்டுமுப்பேர் ௨அ

வானமேயாகாயமுமழையு
முலர்ந்தமரமுமெனுமுப்பேரே ௨௯

வாதந்தானேதருக்கமுங்காற்றும்
வாதமுமெனவேமருவுமுப்பேர் ௩0

வானியேமேற்கட்டியுஞ்சேனையுந்
துகிற்கொடியெனவுஞ்சொல்லுமுப்பேர் ௩க

வாய்தலேவாசலுநுணுக்கமும்
வாய்தலுமெனவேவழங்குமுப்பேர் ௩௨

வாளியேகணையுஞ்சோனைவாளியுஞ்
சுற்றோட்டமுமெனச்சொல்லுமுப்பேர் ௩௩

வாவலென்பதுநசையுங்கடத்தலுந்
துருஞ்சிலுமெனவேசொல்லுமுப்பேர் ௩௪

வாமுதன்முப்பேர்முற்றும்.

வாமுதனாற்பெயர்

வாமமேயிடப்பாலுந்தொடையுங்
குறளும்வனப்புங்கூறுநாற்பேர் ௩௫

வாசமேயிருப்பிடமும்புடவையும்
புள்ளினிறகும்பூமணமுநாற்பேர் ௩௬

வாலேவெண்மையுமிகுதியுமிளமையும்
வாலுமெனவேமருவுநாற்பேர் ௩எ

வாயிலென்பதுபுலனுங்கடையுந்
தூதுந்திறனுஞ்சொல்லுநாற்பேர் ௩அ

வாமுதனாற்பேர்முற்றும்.

வாமுதலைம்பெயர்

வாரேநெடுமையுங்கச்சும்புயலு
நீருநேர்மையுமாகுமைம்பேர் ௩௯

வாளேயொளியுங்கச்சுங்கஈரியும்
வாளுநீருமருவுமைம்பேர் ௪0

வானேபெருமையுமழையும்புயலும்
விண்ணுமமுதமுமேவுமைம்பேர் ௪க

வாமுதலைம்பேர்முற்றும்.

வாமுதலறுபெயர்

வாயேயிடமும்வாய்மையுங்குழலும்
வாக்கும்வாயும்வருவாயுமறுபேர் ௪உ

வாரமேநீர்க்கரையுமன்பு
மலைச்சாரலுஞ்செவ்வாரமுங்கடலு
மேழ்கிழமையுமெனவிசைக்குமறுபேர் ௪௩

வாமுதலறுபேர்முற்றும்.

வாமுதலெண்பெயர்

வாரணந்தானேயானையுங்கடலுங்
கோழியுஞ்சங்குந்தடையுங்கவசமும்
பன்றியுமுன்மத்தமுமெண்பெயரே ௪௪

வாமுதலெண்பேர்முற்றும்.

வாமுதற்பன்னிருபெயர்

வாகையென்பதுவேயறத்தின்றுறையு
மொருமரமுடனேமிகுதிப்பெறுதலுங்
கைவலமுதலாங்கல்வியுமுண்மையு
மாள்வினைமுதலாஞ்செய்கையுநலமு
மொருவரிலொருவர்வென்றியுமொழுக்கமுந்
தவமுஞ்சால்புமுதலாம்பண்பு
மீகையுமெனவேபன்னிருபெயராம் ௪௫

வாமுதற்பன்னிருபேர்முற்றும்.

வாமுதற்பதின்முப்பெயர்

வாரிதானேமடையுங்கதவும்
வெள்ளமுநீருமதிலுங்கடலும்
பகுதியும்வாய்தலும்வழியுநாலும்
வருவாயுடனேயிடமுந்தகைப்பும்
பதின்முப்பேரும்பகரப்படுமே ௪௬

வாமுதற்பதின்முப்பேர்முற்றும்.

வாமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௧௬௪.

## விம்முதற் பலபெயர்ச்சூத்திரம்.

### விம்முதலொருபெயர்

விகலமென்பதுசுருங்கலாகும் க
விகடந்தானேவேறுபாடாகும் உ
விகங்கமேபுட்பொதுப்பேராகும் ங
விசாகனென்பதுமுருகனாகும் ச
விசிகந்தானேயம்பெனலாகும் ரு
விசித்திரமென்பதுபேரழகாகும் சா
விஞ்சையர்தானேவித்தியாதரர்பெயர் எ
விதலையென்பதுநடுக்கமாகும் அ
விதாதாவென்பதுபிரமன்பெயராம் கூ
விதிர்ப்புத்தானேநடுக்கமாகும் க0
விந்தையென்பதுதுர்க்கையாகும் கக
விபவந்தானேசெல்வமாகும் கஉ
விபஞ்சியென்பதுயாழெனப்படுமே கங
விமலமேயழுக்கின்மையாகும் கச
விப்பிரரென்பதுவேதியர்பேரே கரு
விம்மிதமேயதிசயமெனப்படுமே கசா
வியெனலேபுள்ளாமெனவிசைப்பர் கஎ
விகலமேபாகிகையெனப்படுமே கஅ
விலாளமென்பதுபூனையாகும் ககூ
விரிஞ்சன்றானேபிரமனாகும் உ0
விரிச்சியென்பதுநற்சொல்லாகும் உக
விரிச்சிகைதானேயரைப்பட்டியாகும் உஉ
விருச்சிகமென்பதுதேளெனலாகும் உங
விருந்துதானேபுதுமையாகும் உச
விலங்கரசென்பதுசிங்கமாகும் உரு

வில்வந்தானேகூவிளமாகும் உசு
விளித்தாரென்பதுபிணமெனப்படுமே உஎ
விளையுள்தானேகழனியெனலாம் உஅ
விறலியென்பதுபாணிச்சியின்பெயர் உகூ
விரதர்தானேமேலோராகும் ௩0
விழுக்குத்தானேநிணத்தின்பெயராம் ௩க
விருப்பமென்பதுவேயாசையாகும் ௩உ

விம்முதலொருபேர்முற்றும்.

விம்முதலிருபெயர்

விதமேபுட்பொதுவிதமெனவிருபெயர் ௩௩
விடலைதிறலோன்றலைவனிருபெயர் ௩ச
வித்தகரேகண்ணுளருமிடையரும் ௩ரு
விடபமென்பதுமரக்கொம்புடனே
யேறுமென்றேயிசைக்குமிருபெயர் ௩சு
விபுலந்தானேபெருமையும்விரிவும் ௩எ
வில்லேருழவரென்பதுவேந்தரும்
வேடருமெனவேவிதிக்குமிருபெயர் ௩அ
விறலேபெருமையும்வலியுமிருபெயர் ௩கூ
விழவேயுற்சவமிதுனமிருபெயர் ச0
விளவேகமரும்விளாவுமிருபெயர் சக
விம்மலேயேங்குதலுமொலித்தலும் சஉ
விண்ணேமேகமும்விசும்புமிருபெயர் ச௩
விரணமென்பதுவிழலும்விரணமும் சச
விழைவேகாதலும்புணர்ச்சியுமிருபெயர் சரு
வியாளமேபுலியுரகமிருபெயர் சசு
விலோதமேபெண்மயிரும்பதாகையும் சஎ
வியங்கோளென்பதுமேவலுங்கொளலும் சஅ

விளக்குத்தானேவிளக்குநிலையு
மொளியுமெனவேயுரைக்குமிருபெயர் ௪௯

விம்முதலிருபேர்முற்றும்.

## விம்முதன்முப்பெயர்

விலங்குதலேசெலவிடுதலுமெறிதலும்
விலங்குதலெனவுமேவுமுப்பெயரே ௫0

விரைவேவேண்டலும்வெம்மையும்விரைவுமாம் ௫க

விரோதமேயிருளும்வேறுபாடு
மயிருமெனவேமருவுமுப்பெயரே ௫உ

விசாலந்தானேயிடமுங்கடம்பும்
வாழையுமெனவேவைக்குமுப்பெயரே ௫௩

விடரென்பதுமேவதூர்த்தரும்விப்புங்
காமுகரெனவுங்கருதுமுப்பெயரே ௫௪

விதப்பேமிகுதியுமதிலினுறுப்புங்
கம்பிதமெனவுங்காட்டுமுப்பெயரே ௫௫

விதவையேகைம்மணியுஞ்சோறுந்
திருவிலியெனவுஞ்செப்புமுப்பெயரே ௫௬

வியமென்பதுவேமழுவும்வில்லுங்
கொள்வனமெனவுங்கூறுமுப்பெயரே ௫௭

விழுமமென்பதுசிறப்புஞ்சீர்மையு
மிடும்பையுமெனவேயிசைக்குமுப்பெயரே ௫௮

விடிவென்பதுவேயச்சமும்வெளியு
நறும்புகையெனவுநாட்டுமுப்பெயரே ௫௯

விளரென்பதுவேயிளமையும்வெறுப்புங்
கொப்புமெனவேகூறுமுப்பெயரே ௬0

விநாயகனென்பதுகணபதியருகன்
புத்தனெனவும்போற்றுமுப்பெயரே ௬க

விலங்குமிருகமுங்காலிடுதளையுங்
குறுக்குமெனவேகூறுமுப்பெயரே ௬உ

விடையேயேறுமெதிர்மொழிகொடுத்தலு
மேகுதலுமெனவிசைக்குமுப்பெயரே ௬௩

விருத்திதானே விரியவுரைத்தலு
முரிச்சொல்லுரிப்பொருளெனவுமூன்றே ௬௪

விம்முதன் முப்பேர்முற்றும்.

விம்முதனாற்பெயர்

விசையஞ்சருக்கரைவெற்றியக்காரம்
வெங்கதிர்மண்டிலம்விளம்புநாற்பெயரே ௬௫

விரையேமணமுஞ்சாந்துந்தூபமும்
வித்துமெனவேவிரிக்குநாற்பெயரே ௬௬

வில்லேயொளியுமூலநாளும்
வில்லுமூளியுமேவுநாற்பெயரே ௬௭

வியலேபெருமையுங்கலமுங்காடு
மரவட்டெனவுமருவுநாற்பெயரே ௬௮

விசும்பேமுகிலுந்துறக்கமும்விண்ணுங்
கருபமுமெனவேகருதுநாற்பெயரே ௬௯

விளரியேயிளமையும்வேட்கைமிகுதியும்
யாழிலோர்நரம்பும்யாழுநாற்பெயரே ௭0

விம்முதனாற்பேர்முற்றும்.

விம்முதலைம்பெயர்

விடங்கமென்பதுகொடுங்கையுமுகடு
மாண்மையுமழகுங்கொடியுமைம்பேரே ௭௧

விண்டேமாயனும்வெற்புமூங்கிலுங்
காற்றுமேகமுங்கருதுமைம்பெயரே ௭௨

விதியேயயனுங்குணமும்வினையு
மியல்புமூழுமெனுமைம்பெயரே ௭௩

விறப்பேபொருதலும்வெருவலும்வெற்றியும்
பெருக்கமுஞ்செறிவும்பேசுமைம்பேரே ௭௪

விபூதிதானேநீறுங்கொடுமையுந்
தசையுங்குற்றமுஞ்செல்வமுமைம்பெயர் ௬௫

விம்முதலைம்பேர்முற்றும்.

விம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௨௩௬.

வீமுதற்பலபெயர்ச்சூத்திரம்

வீமுதலொருபெயர்

வீதலென்பதுகெடுதலாகும் ௧

வீரட்டானமேகூத்தெனலாகும் ௨

வீரரென்பதுசூரராகும் ௩

வீமமென்பதுவேபயங்கரமாகும் ௪

வீமுதலொருபேர்முற்றும்.

வீமுதலிருபெயர்

வீசுதல்தானேவீசுதலுடனும்
விடுதலும்மனவேமேவுமிருபெயர் ௫

வீங்கலென்பதுவளர்தலும்வீங்கலும் ௬

வீதியென்பதுசெவ்வேபோகலுந்
தெருவுமென்றேசெப்புமிருபெயர் ௭

வீமுதலிருபேர்முற்றும்.

வீமுதன்முப்பெயர்

வீரையென்பதுகடலுந்துயரு
மொருமரமெனவுமுரைக்குமுப்பெயரே ௮

வீமுதன்முப்பேர்முற்றும்.

வீமுதனாற்பெயர்

வீயென்பதுவேநீக்கமுஞ்சாவும்
பூப்புள்ளெனவும்போற்றுநாற்பெயரே ௯

வீசமென்பதுவேயெறிதலுமீவும்
பாத்தலுமிகுதலும்பரவுநாற்பெயரே ௧௦

வீமுதனாற்பேர்முற்றும்.

வீமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௨௪௬.

## வெம்முதற்பலபெயர்ச்சூத்திரம்.

### வெம்முதலொருபெயர்

வெஃகாமையென்பதுவேண்டாமையாகும் க
வெங்கோல்தானேகொடுங்கோலாகும் உ
வெண்களமரென்பதுவேளாளராகும் ௩
வெண்டேர்தானேபேய்த்தேராகும் ௪
வெண்பலியென்பதுசாய்பலாகும் ௫
வெண்கூதாளமேநீர்த்தாளியாகும் ௬
வெதிரந்தானேயிலந்தையாகும் ௭
வெரிநென்பதுவேமுதுகெனலாகும் ௮
வெருவந்தமென்பதுபயமெனலாகும் ௯
வெளிற்றுமரமேமுருக்கெனப்படுமே க௦
வெறிப்புத்தானேசெறிவெனப்படுமே கக
வெற்றமென்பதுவீரமாகும் கஉ
வென்னென்றுரைப்பதுமுதுகெனலாகும் க௩
வெப்பமென்பதுவேனிலாகும் க௪

வெம்முதலொருபேர்முற்றும்.

### வெம்முதலிருபெயர்

வெள்ளிலேவிளாப்பாடையிருபெயர் க௫
வெண்கலமேநாள்வெண்கலமிருபெயர் க௬
வெகுளியேயடங்காமையுங்கோபமும் க௭
வெண்மையென்பதுவேயறிவிலாமையும்
வெள்ளையுமெனவேமேவுமிருபெயர் க௮
வெய்யோனேவிரும்பினோனுமிரவியும் க௯
வெதிரேவேயுஞ்செவிடுமிருபெயர் உ௦

வெம்முதலிருபேர்முற்றும்.

வெம்முதன்முப்பெயர்

வெம்மையேயுட்டிணமும்விருப்பமுங்
கடுமையுமெனவேகருதுமுப்பெயர் ௨௧

வெளிலேயணிலுமியானைத்தறியுந்
தயிர்கடைதறியுமுப்பெயர்சாற்றும் ௨௨

வென்றியென்பதுசெல்வமுந்துர்க்கையும்
வெற்றியுமெனவேவிரிக்குமுப்பெயரே ௨௩

வெள்ளமேயோரெண்ணுமிகுதியுங்
கடலுமெனவேகருதுமுப்பெயரே ௨௪

வெம்முதன்முப்பேர்முற்றும்.

வெம்முதனாற்பெயர்

வெறுக்கையேவிழுப்பொருளுங்கனவும்
பொன்னுஞ்செல்வமும்போற்றுநாற்பெயரே ௨௫

வெடியேபுகையுமணமுமச்சமும்
வெள்ளிடையெனவுமவிரிக்குநாற்பெயரே ௨௬

வெம்முதனாற்பேர்முற்றும்.

வெம்முதலறுபெயர்

வெள்ளையேவெளிறுமோர்பாவும்வெள்ளாடு
பிராமணும்வெள்ளியுஞ்சங்குமறுபெயர் ௨௭

வெம்முதலறுபேர்முற்றும்.

வெம்முதலெண்பெயர்

வெறியென்பதுவேயாடும்வட்டமும்
பேயும்விரைவுநாற்றமுங்கலக்கமும்
வெருவுதலுடன்வெறியாடலுமெண்பெயர் ௨௮

வெம்முதலெண்பேர்முற்றும்.

வெம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௨௭௭.

வேமுதற்பலபெயர்ச்சூத்திரம்

வேமுதலொருபெயர்

வேடகமென்பதுகாதுக்கணியாம் ௧

வேட்கோவர்தானேகுயவராகும் ௨

வேரலென்பதுமூங்கிலாகும் ௩

வேதாளந்தான்பேயெனலாகும் ௪

வேளிரென்பதுகுறுநிலமன்னர் ௫
வேணகைதானேபதிலெனப்படுமே ௬
வேதாளியரேபுகழ்வோர்பெயராம் ௭
வேத்திரமென்பதுபிரம்பெனப்படுமே ௮
வேதினந்தானேயீர்வாளாகும் ௯

வேமுதலொருபேர்முற்றும்.

வேமுதலிருபெயர்

வேசரியேகோவேறுகழுதையுங்
கழுதையுமெனவேகாட்டுமிருபெயர் ௧0
வேதண்டமென்பதுவெள்ளிமலையும்
வெற்புமெனவேவிளங்குமிருபெயர் ௧௧
வேதிகையென்பதுதிண்ணையும்பலகையும் ௧௨
வேத்மேயாழியமும்வேதமும் ௧௩
வேட்டுவனேமகராளும்வேடனும் ௧௪
வேய்தல்தானேமூடலுஞ்சூடலும் ௧௫
வேளேமதனுமுருகனுமிருபெயர் ௧௬
வேலனென்பதுவெறியாட்டாளனு
முருகனுமென்றேமொழியுமிருபெயர் ௧௭
வேலாவலயமேகடலும்பூமியும் ௧௮
வேரேவேர்வும்வேருமிருபெயர் ௧௯
வேணியேமயிர்ச்சடைவிசும்பிருபேர் ௨0

வேமுதலிருபேர்முற்றும்.

வேமுதன்மூப்பெயர்

வேணுவென்பதுவேவேயும்வாளும்
வில்லுமெனவேமேவுமுப்பெயரே ௨௧
வேங்கையேயோர்மரமும்புலியும்
பொன்னுமென்றேபோற்றுமுப்பெயரே ௨௨
வேகந்தானேயடம்பும்வேகமுங்
கீழுமெனவேகிளக்குமுப்பெயரே ௨௩
வேலியென்பதுமதிலுங்காவலு
மூருமெனவேயுரைக்குமுப்பெயரே ௨௪
வேளாண்மையேயுபகாரமுமெய்ம்மையுங்
கொடையுமெனவேகூறுமுப்பெயரே ௨௫

வேள்வியென்பதுவேள்விக்குண்டமுந்
தேவர்பூசையுங்கொடையுமுப்பெயரே — உசு

வேமுதன்முப்பேர்முற்றும்.

வேமுதனாற்பெயர்

வேலென்பதுகைவேலுமூங்கிலும்
வேலுமாயுதப்பொதுப்பெயரொடுநாலே — உஎ

வேழமேகொறுக்கச்சியுமூங்கிலும்
யானையுங்கரும்புமிசைக்குநாற்பெயரே — உஅ

வேயென்பதுவேவினையுமூங்கிலு
மொற்றுந்துளைவேய்தலுநாற்பெயரே — உகூ

வேலையேகடற்கரையுங்கடலுந்
தொழிலுமோர்காலமுஞ்சொல்லுநாற்பெயரே — ௩0

வேமுதனாற்பேர்முற்றும்.

வேமுதலைம்பெயர்

வேந்தனேயிந்திரனும்வியாழமு
மன்னனுமதியும்பானுவுமைம்பெயர் — ௩க

வேமுதலைம்பேர்முற்றும்.

வேமுதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—௩0அ.

வைம்முதற்பலபெயர்ச்சூத்திரம்

வைம்முதலொருபெயர்

வையகமென்பதுபூமியாகும் — க
வைப்புத்தானேகைகாட்டாகும் — உ
வைத்தியமென்பதுபரிகாரப்பெயர் — ௩
வைகலந்தானேநாளெனப்படுமே — ௪

வைம்முதலொருபேர்முற்றும்.

வைம்முதலிருபெயர்

வைகறையாமமும்விடியலுமிருபெயர் — ரு

வைம்முதலிருபேர்முற்றும்.

வைம்முதனாற்பெயர்

வையென்பதுவைக்கோலுங்கூர்மையும்
புல்லுபவையும்போற்றுநாற்பெயரே — சு

வைகலேவைகறையுநாளுங்
கழியுநாளுந்தங்கலுநாற்பெயர் எ

வைம்முதனாற்பேர்முற்றும்.

வைம்முதலெண்பெயர்

வையமேமாவேனறுமூரோகணியும்
பூமியுஞ்சிவிகையுஞ்சகடமுந்தேரு
மூர்தியும்விளக்குமேமோதுமெண்பெயரே அ

வைம்முதலெண்பேர்முற்றும்.

வைம்முதற் பலபெயர்ச்சூத்திர முற்றும்.

ஆகச்சூத்திரம்—கூகசு.

வௌமுதலொருபெயர்

வௌவலென்பதுபிடித்தலாகும் க

வௌவாறுனேயோர்பறவைப்பெயர் உ

வௌமுதலொருபேர்முற்றும்.

ஆகச்சூத்திரம்—கூகஅ.

மேழித்துவசன்விளங்கியபுலியூர்
வாழ்நற்சிதம்பரரேவணசித்த
னிதியிற்றருமகராதிநிகண்டினிற்
பத்தாம்வகராதிப்பெயர்த்தொகுதி
யேத்துசூத்திரமுந்நூற்றெழுநான்கே

பத்தாவது

வகராதிப்பெயர்த்தொகுதிமுற்றும்.

ஆகத் தொகுதிபத்துக்குச் சூத்திரம்—கூகூகூச.


அகராதிநிகண்டு
முற்றும்.

